# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

KALKI
16.9.2007 ரூ.8.00
80 பக்கங்கள்



ஸ்தம்பித்துப் போன ஸ்டாலின் நிர்வாகம்!

-அ.தி.மு.க. அட்டாக்!

# அதிசயமாகிய சினிமா!

Kadaiveethi ANS 80 Years

# கடைவீதி ANS




## வளையோசை

**செப்டம்பர் 1-12**

**2 & 9**
**ஞாயிற்றுக்கிழமை கடை உண்டு**

காண்போரை கவர்ந்திழுக்கும் அழகுடன் தங்கத்திலான மற்றும் உயர்தரமான கற்கள் பதித்த கலைநயமிக்க வளையோசை. இதுவரை எங்கும் கண்டிராத புத்தம் புது எண்ணற்ற டிசைன்கள், உங்கள் கைகளை அலங்கரிப்பதற்காகவே!

80-ம் ஆண்டின் துவக்கத்தை முன்னிட்டு பள்ளி மாணவ-மாணவியர்களுக்கு 'ஓவியமே ஓடிவா' நகை ஓவியப்போட்டி நடைபெற உள்ளது. இப்போட்டியில் பங்கு பெறும் அனைத்து மாணவ - மாணவியர்களுக்கும் சான்றிதழ்களும், பரிசுகளும் வழங்கப்படும். தேர்ந்தெடுக்கப்படும் ஓவியங்களுக்கு சிறப்பு பரிசுகளும் உண்டு. விண்ணப்ப படிவங்களை கடைவீதி ANS-ல் மட்டுமே பெற்றுக்கொள்ளலாம்.



916

ANS

**கும்பகோணம் ஜுவல்லர்ஸ்**

கடைவீதி, சேலம்
போன்: (0427) 2264221, 2265180




# மாயைகளைத் தெளிவாக்கியது!

### கடுகு வெடிக்கும் வரை...

அவசரக்காரர்களை ஆசிரியர் தனது பக்கத்தில் நன்றாகத் தாளித்து விட்டார்.

- கே.கஸ்தூரி, வேலூர்
- இந்திரன், நாகர்கோவில்
- என்.கோமதி, நெல்லை
- பொருநை பாலு, திருநெல்வேலி

### ஆடிக் கொள்ளை!

கடவுளின் பெயரைச் சொல்லி ஏமாற்றும் எத்தர்களின் வசூல் கொள்ளையைக் கட்டுரை தைரியமாய்ச் சுட்டிக் காட்டியது. சபாஷ்!

- சுப்பராமன், உறையூர்
- யாழினி பர்வதம், சென்னை
- அய்யாறு எஸ்.வாசுதேவன், சென்னை

### சிறுகதையும், கவிதையும்...

மனிதர்களின் உறவும் நட்பும் உயிரை விட மேலானவை என்பதை 'பாம்பு' சிறுகதை வலியோடு உணர்த்தியது.

- ரா.தேன்மொழி, சென்னை
- ஜெ.துரைராஜ், ஆலப்பாக்கம்
- ஏ.பி.எஸ்.ரவீந்திரன், வள்ளியூர்



### உள்ளும் புறமும்

பாகிஸ்தானின் பயங்கரவாத பக்கங்கள் மட்டுமே தெரிந்திருந்த எங்களுக்கு 'உள்ளும் புறமும்' மூலம் அவர்களின் முன்னேற்றத்தைக் காட்டிவிட்டீர்கள்!

- எம்.ஜான்சன், கோவில்பட்டி
- கே.சண்முகம், புதூர்

### சினிமாவும் சிவப்பழகும்!

நிறம், அழகு குறித்த பலருடைய மாயைகளை 'சினிமாவும் சிவப் பழகும்' கட்டுரை தெளிவாக்கும்.

- சரவணன், திருவாரூர்,
- உமாதேவி பலராமன், திருவண்ணாமலை
- ஆர்.பிருந்தா, மதுரை
- எஸ்.சங்கர், மதுரை

### திண்டாட்டத்தில் தமிழக அரசு!

சரியான நேரத்தில் சரியானபடி எடுத்துரைத்த கட்டுரை. தமிழக அரசுக்குத் தற்போது அவசியமானதும்கூட.

- தர்மன் பெரியசாமி, சென்னை
- ப.மூர்த்தி, பெங்களூர்
- எஸ்.ஆர்.மணியன், த.முருங்கப்பட்டி

### தலையங்கம் + தராசு!

'பொது வாழ்வுக்கு...' வெறும் தலையங்கமல்ல நமது அரசியல்வாதிகள் கற்க வேண்டிய பாடம்!

- ஆர்.ராமசுப்ரமணி, திருவாரூர்

சோம்பல்தான் வறுமையைவிடக் கொடிய நோய் என்ற தராசுவின் பதில் வாழ்வின் அற்புத தத்துவம்.

- சத்தியநாராயணன், அயன்புரம்
- ஏ.ஜி.கல்யாணசுந்தரம், மணியக்காரன்பாளையம்

## ஸ்பீட் போஸ்ட்

தீவிரவாதம் ஒரு சமூகத்தினரால் பரவுவதை அதே சமூகத்தின் கருத்துகளைக் கேட்டு விளக்கிய விதம் நன்று. கல்கியின் துணிச்சலைப் பாராட்டுகிறேன்.

தலையங்கத்தின் நோக்கம் சரிதான். எனினும் அதை வெளிப்படுத்திய விதத்தில் குறைபாடு உள்ளதாகத் தெரிகிறது. அட்டை பட வாசகத்திலும் கல்கியின் வழக்கமான நிதானம் இல்லை.

- வானவில் மூர்த்தி, கடலூர்
- தமிழினியன், திருச்சி




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

ஆசிரியர் குழு :
**சா.ஜெயராஜ், ஆரணி யுவராஜ்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



# அதிசயமாகிய

தமிழ் சினிமா இயக்குநர்கள் கலபத்தில் எடுக்கத் துணியாத கதைக்களம் - அம்முவாகிய நான். 'பெண் ரசிகைகள் இல்லாட்டா படம் எப்படி ஓடும்' என்று சொல்லியே இவரை எத்தனை தயாரிப்பாளர்கள் கலங்கடித்திருப்பார்களோ தெரியவில்லை. ஆனால் விடாப்பிடியாகத் தன் கதை மேல் நம்பிக்கை வைத்துப் பெண்களின் பிரச்னையையே- அதுவும் பாலியல் தொழிலில் ஈடுபடும் பெண்களின் பிரச்னையைத் துணிந்து பேசியுள்ளார் இயக்குநர் பத்மா மகன்.

தகப்பனின் குடி போதைக்காக விற்கப்படும் ஒரு பெண் சிசு, பாலியல் தொழிலாளர்களின் மத்தியில் வளர்க்கப்பட்டு, பாலியல்தான் உலகம் என்றெண்ணி வளர்கிறாள். 'இல்லை... உண்மையான உலகம் வேறு; அதன் மகிழ்ச்சிகள் உயர்வானவை' என்று சொல்லி, அவளை விரும்பி மணந்துகொள்கிறான் ஒருவன். இறுதி வரை அவளுக்கு அந்த உறவு நீடித்ததா, அந்த உறவுடன் அவளால் நீடித்து இருக்க முடிந்ததா என்பதை உணர்ச்சிக் குவியலாகப் படைத்திருக்கிறார் பத்மா மகன்.

எழுத்தாளர் கௌரிசங்கர் கதாபாத்திரத்தில் மிக இயல்பாகப் பொருந்திப் போகிறார் பார்த்திபன். தம்மிடம் வரும் பாலியல் தொழிலாளியின் கழுத்தில் ஊசலாடும் தாலிக்கு மரியாதை தந்து திரும்பிப் போகும் மாண்புமிகு மனிதர். மனைவியின் நடத்தை பற்றிப் பேசும் நண்பனிடமும் அவளை வீட்டை விட்டுத் துரத்தியடிக்கும் அக்காவிடமும் அவர் காட்டும் ஆக்ரோஷமாகட்டும், மனைவியின் முன்னாள் நண்பராக வந்து அவளைப் பற்றி விசாரிக்கும் அபிஷேக்கிடம் 'நான்தான் அவளைக் கட்டிக்கிட்டவன்' என்று கலங்காமல் தைரியமாக எதிர்கொள்வதாகட்டும், வித்தியாச நடிப்பின்




விளைநிலமாகத் திகழ்கிறார் பார்த்திபன்.

**பா**ரதி - புதுமுகம் மாதிரியே தெரிய வில்லை. ஒவ்வொரு காட்சியிலும் அவர் வெளிப்படுத்தும் முகபாவங்கள் முகம் மூடிய உறக்கத்திலும் நம் நினைவில் வந்து நிற்பவை. பாலியல் தொழிலாளியின் பாவனைகளை அப்படியே பிரதிபலிக் கிறார். அந்த அலட்சியம், முகம் கொள்ளா சந்தோஷம், வாழ்க்கை யைப் பொருட்டாகவே மதிக்காத தெனாவட்டு என்று கலவையான காந்தமாக மிளிர்கிறார். பார்த்தி பனை மணந்த பின் ஒரு குடும்பப் பெண்ணாய் அவர் காட்டும் மாற் றங்களும் மிக அழகு. "ராணியம்மா வீட்டுக்கு நான் திரும்ப எப்படிப் போவேன்னு நினைச்சே கௌரி" என்று கலங்கும்போது நம்மை மீறி வெளிப்பட்டுவிடுகிறது ஒன்றி ரண்டு கண்ணீர்த் துளிகள்.

சின்னச் சின்ன பாத்திரங்கள்தான் என் றாலும் அதிலும்கூட எத்தனை நேர்த்தி! ராணியம்மாவாக வந்து மகளுக்காக வீட்டுப் பத்திரத்தை பார்த்திபனிடம் திருப்பித் தந்து அம்மாவாகும் சாதனா, பாலியல் தொழிலாளியை நண்பன் மணந்து கொண்டானே என்ற ஆத்திரத்தில் அவனை வெறுத்தாலும் அவனுக்காகப் பரிவு காட்டும் தென்னவன், சந்திக்கும் பெண்களிடமெல்லாம் ஐஸ்க்ரீம் ஒத்தடம் தரும் அபிஷேக், தாலியின் மகிமையை எழுத்தாளனிடம் உணரும் ராககுதா, தன் னைப் பற்றி உணரும் நாளில் காணாமலே போய்விடும் ராஜஸ்ரீ, பலமும் பலவீனமும்

'அம்முவாகிய நான்' படத்தின் இயக்குநர் பத்மா மகன் என்ன சொல் கிறார்?

"நான் ரொம்பக் கடமைப்பட்டிருக்கறது என் தயாரிப்பாளர் ரூபஸ் பார்க்கருக்குத் தான். அவர் ஓர் அயல்நாட்டு இந்தியர். 'பல்லவன்' பட வாய்ப்பும் தந்து, 'அம்மு' வையும் அழகா தயாரிச்சவர். 'பல்லவன்' படத்துக்கு முந்தியே நான் ரெடி பண்ணி வெச்சிருந்த ஸ்கிரிப்ட் இது. உடனே ஓகே பண்ணினார் ரூபஸ் சார். ஆனா நான்தான் கமர்ஷியல் படம் பண்ணுவோம்னு பல்லவன் பண்ணேன்; சரியா போகல. மனம் தளராத என் தயாரிப்பாளர், அம்முவை எடுத்தே ஆகணும்னு இப்ப சாதிச்சுட்டார். ஓர் இயக்குநரா 'அம்மு வாகிய நான்' நான் ரசிச்சு எடுத்த படம். ரொம்ப திருப்தியா இருக்கு. சென்ஸார்ல ஒரு கட் கூட தரல. கைதட்டிப் பாராட்டி னாங்க. அஞ்சு உறுப்பி னர்கள்ல இரண்டு பேர் பெண்கள். பெண்களை உயர்வா சித்திரிக்கணும்னு தான் படம் எடுத்தேன். ஆனா லேடீஸ் ஆடி யன்ஸ் குறைவா வர்றாங் கங்கறது மெள்ளச் சரியா யிடும். பெண்களுக்கான படத்தைப் பெண்களே பார்க்கலைன்னா எப்படி?"


* பத்மா மகன்

**எ**ழுத்தாளர் கௌரிசங்கராய் வாழ்ந்தி ருக்கும் பார்த்திபன் நம்மிடம் பேசும்போது, "ஒரு ஹீரோவா மட்டும் நான் இருந்தி ருந்தா நிச்சயம் நான் இந்தப் படத்துல நடிச்சிருக்க மாட்டேன். கௌரிசங்கர் கதாபாத்திரமும் அம்முவோட கதையும் தான் என்னை அசைச்சது. பெண்களோட வாழ்க்கைத் தரத்தை உயர்த்தணும், அவங் களை மேம்படுத்தணும்ங்கறதுதானே இந்தச் சமூகத்தோட உயர்ந்தபட்ச நோக் கமும் குறிக்கோளும்! அதைத்தான் 'அம்முவாகிய நான்' செஞ்சிருக்கு.

பெண்கள் படம் பார்க்க வரலைங்கற தெல்லாம் சுத்த ஹம்பக். எனக்குத் தெரிஞ்சு படம் பார்த்துட்டு என்னைப் பாராட்டினவங்கள்ல அதிகமானவங்க பெண்கள்தான். முதல் இரண்டு வார ஆடியன்ஸுக்கான படம் இல்ல அம்மு. தமிழ் சினிமாவை அடுத்த கட்டத்துக்குக் கொண்டு போற ஒரு முயற்சி.

ஒவ்வொரு இளைஞனும், ஒவ்வொரு பெண்ணும் பார்க்க வேண்டிய படம். கௌரிசங்கரோட மனசு புரிஞ்சு, அம்முவோட வேதனை உணரப்பட்டாலே போதும். பார்த்திபனுக்கான ரசிகர்கள் கௌரிசங்கரை நிச்சயம் ஏத்துப்பாங்க. ஏன்னா எல்லாவித பாத்திரங்களையும் ஏற்று நடிக்கிற ஒரு மனிதனாத்தான் நான் அவங்களை மோல்டு பண்ணி வச்சிருக்கேன்'' என்றார்.





'அம்மு'வாகிய பாரதியின் கருத்து இது:

''நிறைவான ஒரு படத்துல நடிச்ச திருப்தி நெஞ்சு முழுக்க நிறைஞ்சிருக்கு. பல நடிகைகள் பண்ணத் தயங்க, கதைக்காகவே இந்தப் படத்தை நான் ஒப்புக்கிட்டேன். என்கூட நடிச்ச ராஜஸ்ரீ, சாதனா எல்லாரும் ரொம்ப உதவியா இருந்தாங்க. என் நண்பர்கள், திரையுலகப் பிரமுகர்கள்னு பலரும் ஃபோன் பண்ணி வாழ்த்திக்கிட்டிருக்காங்க. விருது கிடைக்கும்னு சொல்றாங்க, பார்ப்போம். ஆபாசமா நடிச்சதா நான் நினைக்கல. கதைக்கு, அந்த அம்மு கதாபாத்திரத்துக்கு என்ன தேவையோ அதைத்தான் செஞ்சிருக்கேன். அம்முவோட இருவேறு உலகத்தையும் வித்தியாசம் பண்ணிக் காட்டணும், காட்டியிருக்கோம். இந்த கேரக்டருக்காக நான் எந்த ஹோம் ஒர்க்கும் பண்ணல. ஆனா டைரக்டர் என் ஹோம் வொர்க்கையும் சேர்த்துப் பண்ணியிருக்கார்.

அடுத்தடுத்து பண்ற படங்களும் நல்ல கதையம்சமுள்ள, வித்தியாசமான கேரக்டர்களா பண்ணணும்னு ஆசைப்படறேன்.''

●

நிறைந்தவன்தான் மனிதன் என்பதை உணர்த்தும் மகாதேவன் என்று தேவையற்றுத் திணிக்கப்படாமல், தேவைக்காகவே வாழ்ந்திருக்கும் முகங்களுக்கு வாழ்த்துக்கள்!

குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டியவை இரண்டு: வசனம், ஒளிப்பதிவு. உலுக்கும் வார்த்தைகளால் கருணிராசனின் பேனா உள்ளத்தை உரச, காட்சிகளைக் கவிதைகளாய் நகர்த்தி அம்முவை அழகோவியமாய்ப் படைத்திருக்கிறார் எம்.எஸ்.பிரபு. வலிகளும் வேதனைகளும் நிரம்பிய சம்பவங்களுக்கு சபேஷ் முரளி கொடுத்திருக்கும் பின்னணி இசை, நம்மை இனம் புரியாத சோகத்தில் ஆழ்த்திவிடுகிறது. பாடல்களை இன்னும் அழுத்தமாய்த் தந்திருக்கலாம்.

தன்னிடம் விற்கப்பட்ட பெண் குழந்தைக்கு எவ்வளவு வேண்டுமென்று சாதனா கேட்கும்போது, பழைய பேப்பர்காரனின் இங்கிலீஷ், தமிழ் தினசரிகளுக்கான பேரத்தை உள் நுழைத்து ஆரம்பக் காட்சியிலேயே அசத்தும் இயக்குநர், சபாஷ் போட பல சந்தர்ப்பங்களை அள்ளித் தெளித்திருக்கிறார்.

மெதுவாக நகரும் திரைக்கதை, மனத்தில் ஒட்டாத பாடல்கள், தேவையாக இருந்தாலும்கூட இன்னமும் கண்ணியமாகக் காட்டப்பட்டிருக்கலாம் என்று எண்ண வைக்கிற ஒருசில காட்சிகள் என குறைகளும் உண்டு. ஆனால், அடிதடி, வெட்டுக் குத்துப் படங்களுக்கு மத்தியில் முகிழ்த்திருக்கும் அம்முவாகிய நான் - ஓர் அதிசயமாகிய தமிழ் சினிமா!

– மு.மாறன்

'குப்பை விவகாரம் விஸ்வரூப மெடுத்துவிட்டது. சென்னையில் உள்ள மூன்று மாநகராட்சி மண்டலங்களில், குப்பை அள்ளும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்த ஓனிக்ஸ் என்ற நிறு வனத்துக்குப் பதில் வேறொரு நிறு வனத்தை நியமிப்பதில் ஏற்பட்ட குளறு படிகள் காரணமாக சென்னையே நாறிப் போனது (போய்க் கொண்டிருக்கிறது).

# ஸ்தம்பித்துப் போன ஸ்டாலின் நிர்வாகம்!

''இதற்கு முழுப் பொறுப்பேற்க வேண்டியவர்கள் மாநகராட்சி மேய ரும் உள்ளாட்சித் துறை அமைச்சரும் தான். இதன் மூலம் ஸ்டாலினின் திறமையற்ற நிர்வாகம் வெளிச்சத்துக்கு வந்துவிட்டது'' என்கிறார் அ.தி.மு.க. பாராளுமன்றக் குழுத் தலைவர் டாக்டர் மைத்ரேயன்.

''இந்த ஓனிக்ஸ் நிறுவனம் கடந்த ஏழு வருடங்களாகக் குப்பை அள்ளும் பணியை மேற்கொண்டு வந்தது. அது திறமையாகச் செயல்படவில்லையா? அதை மாற்ற வேண்டிய அவசியம் ஏன் வந்தது? இதற்கு நிர்வாகம் பதில் சொல்ல வேண்டும்.

அடுத்து, நீல் மெட்டல் நிறுவனத்துடன் ஒப்பந்தம் செய்யும்போது, அந்த நிறு வனம் குப்பை அள்ளத் தகுதி வாய்ந்ததா என்று பார்க்கப்பட்டதா? ஒப்பந்தம் கையெழுத்தான பின்னர் ஆகஸ்ட் மாதம் 25ஆம் தேதி முதல் குப்பை அள்ளும் பணிக்குப் புதிய நிறுவனம் தயாராகி வருகிறதா என்று ஏன் கண்காணிக்கவில்லை? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் பதிலில்லை. சிங்காரச் சென்னை தொடர்ந்து நாறிக் கொண்டிருக்க, மதுரையில் போய் ஸ்டாலின் 'அந்த நகரைச் சிங்கப் பூராக்குவேன்' என்று முழங்குவது நல்ல வேடிக்கை!''

''ஆகஸ்ட் 31ம் தேதி எங்கள் பொதுச் செயலாளர் அறிக்கைவிட்ட பின் தான் அரசுக்கு உறைத்தது. உடனே புதிய 'ஒப் பந்தம் ரத்து செய்யப்பட்டது. பழைய நிறுவனமே தொடர்கிறது' என்றெல்லாம் அறிக்கைகள் வருகின்றன. அப்படியென் றால் புதிய நிறுவனம் தொடர்ந்து வேலை செய்வது எப்படி?''

மாநகராட்சிக்கு உதவும் வகையிலும், மக்களின் ஆரோக்கியத்தை மனத்தில் கொண்டும்தான் குப்பை அள்ளும் பணி யில் நாங்களே இறங்கினோம். ஆனால் கைது, ஜெயில் என்று எங்களை மிரட்டு



* மைத்ரேயன்

## அ.தி.மு.க. அட்டாக்!

கிறார்கள். மத்திய அரசை எதிர்த்துப் போராடிய மாநில அமைச்சர் வீர பாண்டி ஆறுமுகம் மீது முதலில் நடவடிக்கை எடுக் கட்டும். குப்பை அள்ள எங்களுக்கு அதிகார மில்லையாம்! அப்படி யென்றால் காவல் துறைக் குக் குப்பை அள்ளும் அதி காரத்தைக் கொடுத்தது யார்? அவர்களுக்கு வேறு வேலை இல்லையா? மாநக ராட்சியின் மற்ற மண்டலங் களில் வேலை செய்யும் பணியாளர்களைப் பயன் படுத்தி, மூன்று மண் டலங்களில் நிலைமையை ஏன் சரி செய்யவில்லை? ஆக, உள்ளாட்சி நிர்வாகம் உறங்கிப் போய்விட்டது.

அழுகிப்போன காய்கறி கள், மாமிசங்கள், பிளாஸ் டிக் பொருட்கள் என்று சுற்றுச்சூழலுக்கு மாசு உண்டாக்கும் குப்பைகள் நிறையவே தேங்கிக் கிடக் கின்றன. கூடவே மழை வேறு பெய்கிறது. கொசுக் கள் பெருகிவிட்டன. மக் களுக்கு காலரா, மலேரியா, எலிக் காய்ச்சல் போன் றவை வருவதற்கு ஏற்ற சூழலை அரசே ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது. மொத் தத்தில் மக்களின் ஆரோக் கியத்தோடு விளை யாடி விட்டது தமிழக அரசு.''

**– ப்ரியன்**

படம் : **ஸ்ரீஹரி**

## காவல் துறைக்குக் குப்பை அள்ளும் அதிகாரத்தை யார் கொடுத்தது? அவர்களுக்கு வேறு வேலை இல்லையா?





தவறுகள் நடக்கும்போது பயமின்றி, தைரியமாகச் சுட்டிக்காட்டுவது கல்கியின் தலையங்கம். இந்த வார 'இஸ்லாமியரே, இணைந்து கைகொடுங்கள்' அப்படித்தான் இருந்தது. யார் மனதையும் புண்படுத்திவிடாமல், அதேசமயம் தார்மீகக் கடமையை உணர்த்திய விதம் அருமை. ஜோக், ஹைகூ சம்பந்தமான போட்டிகளை வையுங்கள். இருபதாண்டுகளாக கல்கியை



'சீக்ரெட் ஆப் சிறுநீரகம்' தொடர் அற்புதமாக உள்ளது. சாதாரணமாக மருத்துவக் கட்டுரைகளைப் படிப்பதென்றால் பொறுமை வேண்டும். இரண்டு பக்கங்களைப் படிப்பதற்குள் கொட்டாவி வரும். ஆனால், டாக்டர் ரவிச்சந்திரன் வித்தியாசமான நடையில் அழகாகச் சொல்வதால் படிப்பதே தெரியவில்லை. இன்னும் பக்கங்களை அதிகமாக்கி, விலையை வேண்டுமானால் கூட்டுங்கள். 'வாரம் ஒரு பாசுரம்' 'அருள்வாக்கு' பகுதிகளைத் தவறாமல் படித்துப் பாதுகாத்து வருகிறேன். அட்டையில் சினிமா நடிகர், நடிகைகளைப் போடாதீர்கள்.

- அலமேலு இராசகோபால்,
சென்னை

இந்த வார கவர் ஸ்டோரியைப் படித்தேன். தீவிரவாதத்துக்கு சாதி, பேதம் கிடையாது. இத்தகைய கொடுமையைச் செய்பவர்கள் மனித இனத்திலேயே சேர்க்கப்பட வேண்டியவர்களல்ல. அப்படியிருக்க இஸ்லாமிய தீவிரவாதிகள், இந்து தீவிரவாதிகள் என்று சொல்வதே தவறு. இந்திய அரசாங்கமும், பாகிஸ்தான் அரசாங்கமும் அரசியல் லாப நோக்கமின்றி நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். இந்தியாவில் நடக்கும் வன்முறையின் போது ஒவ்வோர் இஸ்லாமிய சகோதரரும் ஒங்கிக் குரல்கொடுக்க வேண்டும்.

- த.சத்தியநாராயணன்,
அயன்புரம்



வாசிக்கிறேன். ஒவ்வோர் இதழும் மனத்தைத் திருப்திபடுத்தத் தவறுவதில்லை. அட்டையில் எப்போதாவது செய்தியை ஒட்டி சினிமா பிரபலங்கள் வந்தால் தவறில்லை. மற்றபடி இந்த வார அட்டையைப் போல் வலுவான படங்களாக இருக்கட்டும்.

- என்.பாலகிருஷ்ணன்,
மதுரை



# வாழ்நாளின் பாதி...!

கடந்த இரண்டு, மூன்று வாரங்களாக வட்ட மேஜையில் நிறைய கடிதங்களை வெளியிடுகிறீர்கள். என்னைப் போன்ற வாசகர்களுக்கு இது உற்சாகத்தை அளிக்கிறது. இதழ் குறித்த கருத்தை அனுப்பிவிட்டு, அது வெளியாகுமா என்று ஆவலுடன் பார்க்கும் வாசகர்களுக்கு இது சந்தோஷத்தைத் தரும். சிறுகதைகளுக்கு இன்னும் கூடுதல் பக்கங்களை அளிக்கலாம்.

- எல்.வெங்கடேசன்,
திருநெல்வேலி



கல்கியை இருபத்தைந்து ஆண்டுகளாகப் படிக்கும் எனக்கு வயது நாற்பத்தொன்று. என் வாழ்நாளின் பாதி ஆண்டுகளுக்கும் மேலாக 'கல்கி' என்னோடு இருக்கிறது. நமது நடைமுறை வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் விதமாக கல்கி உள்ளது. சமீபகால மாற்றங்கள் சிறப்பாகவும் அதே சமயம் தரம்மாறாமலும் இருக்கின்றன. போஸ்ட் கார்டு கதைகள், பொன் மொழிகளை ஆங்காங்கே வெளியிடவும் பத்திரிகைகளுக்கு முதுகெலும்பே எழுத்தாளர்களும் நிருபர்களும்தான். அத்தகையோரை வெளிச்சமிட்டுக் காட்டும் பகுதியை அளிக்கலாம். வறுமையில் வாடும் படைப்பாளிகளை அடையாளம் காட்டி முன்னேறச் செய்யலாம்.

- தி.மா. முருகானந்தம்,
திருவைகாவூர்

# பக்குவப்படுத்திய பாலுமகேந்திரா!

இரு இளைஞர்கள். தலைவனாக, எல்லாத் தகுதிகளும் இருந்தும் சராசரி வாழ்க்கையை வாழ்கிறான் ஒருவன். அண்ணன் தலைவன் என்பதால் அவனுக்குக் கிடைக்கிற மரியாதையைப் பார்த்துத் தானும் தலைவனாக வேண்டும் என்று நினைக்கிறான் எந்தத் தகுதியும் இல்லாத இன்னொருவன். இருவரையும் சுற்றி இழைந்து ஓடுகிற இரண்டு வரிக் கதைதான் தனுஷ் நடிக்கும் 'பொல்லாதவன்'. அதன் இயக்குநர் வெற்றிமாறனுக்கு இது முதல் படம். அவர் நம்மோடு பேசினார்.

''ராணிப்பேட்டைதான் என் சொந்த ஊர். சின்ன வயசுல ருந்தே இதுதான் என் துறைன்னு குறிப்பா எதையும் சொல்ல முடியல. கராத்தே, பாட்டு, மிமிக்ரி எல்லாம் பண்ணினேன். பதினாறு வயசுக்குக் கீழ இருக்கறவங்களுக்கான கிரிக்கெட் போட்டியில டிஸ்ட்ரிக்ட் சாம்பியன்.

போதுமான அட்டெண்டன்ஸ் இல்லாததால ஹெச்.எம். ப்ளஸ் ஒன் பரீட்சை எழுதவிட மாட்டேனுட்டார். நான் கோபத்துல அவரைப் புடிச்சுத் தள்ளிவிட்டுட்டு வீட்டுக்கு வந்தேன். அம்மாகிட்ட பத்தாயிரம் ரூபா பணம் கொடுத் தாத்தான் ஹெச்.எம். பரீட்சை எழுத விடுவாராம்னு பொய் சொன்னேன். அம்மா கொடுத்த பணத்தை வாங்கிட்டு, நானும் என் நண்பனும் வேலூருக்குப் போனோம்.

வேலூர்ல ஒரு டிஸ்ட்ரிபியூட்டர்கிட்ட 'தர்மத்தின் தலைவன்' படத்தை வாங்கி ஒரு தியேட்டர்ல ஸ்பெஷல் ஷோ போட்டோம். வசூலான எல்லாக் காசையும் செலவழிச்சிட்டோம். ஷோ முடியும்போது கையில வெறும் பன்னிரெண்டு ரூபாதான் இருந்தது. மறுபடியும் அம்மாகிட்ட வந்து, ஹெச்.எம். இன்னும் பணம் கேக்கறார்னு பொய்சொல்லி, நாலாயிரம் ரூபா வாங்கினேன். மெட்ராஸுக்கு ஓடி வந்தேன்.

என்னை இன்ஜினியர் ஆக்கணும்னு அப்பா ஆசைப்பட்டார். சென்னை ஒய்.எம்.சி.ஏ.ல சேர்த்து விட்டார். அப்புறம் லயோலாவுல சேர்ந்தேன். என்னை முழுசா மோல்டு பண்ணின இடம் லயோலாதான். ஓ.பி. அடிக்கறதுக்காக இங்கிலீஷ் லிட்டரேச்சர் எடுத்தேன். அதுக்கப்புறம்தான் எனக்குப் படிக்கறதுல ஆர்வம் வந்துச்சு.

செகண்ட் செமஸ்டர் படிக்கும்போது நானும் மார்ட்டின்னு ஒரு பையனும் சேர்ந்து, ஒரு டாகுமெண்டரி எடுத்தோம். டாகுமெண்டரி காம்படிஷனுக்கு ஜட்ஜா வந்தவங்கள்ல ஒருத்தர் இயக்குநர் பாலுமகேந்திரா. அந்த டாகுமெண்டரிக்குப் பரிசு கிடைக்கலை. ஆனா எல்லாரும் எங்களைப் பாராட்டினாங்க. படத்தைப் பார்த்துட்டு அடையாறு ஃபிலிம் இன்ஸ்டிடியூட், ஆக்டிங் டிபார்ட்மெண்ட் ஹெச்.ஓ.டி.யா



இருந்த மதன் கேப்ரியல், 'சினிமாதான் உன் வாழ்க்கைன்னு முடிவு பண்ணிட்டா, உனக்குப் பெரிய எதிர்காலம் இருக்கு'ன்னு சொன்னார். பாலுமகேந்திரா, புரபஸர் ராஜநாயகத்துக்கிட்ட ''நல்ல தமிழ் இலக்கியப் பரிச்சயம் உள்ள பையன் யாராவது இருந்தா சொல்லுங்க. எனக்கு அஸிஸ்டெண்ட்டுக்கு ஆள் வேணும்''னு சொல்லியிருந்தார். புரொபஸர் என்னை பாலுமகேந்திரா சார்கிட்ட அனுப்பினார்.



# இயக்குநர் வெற்றிமாறன் பேட்டி

எனக்குத் தமிழ் இலக்கியம் அவ்வளவாகத் தெரியாதுனு தெரிஞ்சதும் எப்படி அஸிஸ்டண்ட்டா சேத்துக்கறதுன்னு யோசிச்சார். நான் அவர்கிட்ட கொஞ்சம் டயம் கேட்டேன். அவர்தான் புதுமைப்பித்தன், தி.ஜானகிராமன், கு.அழகிரிசாமின்னு சில எழுத்தாளர்களோட பேரைச் சொன்னார். நான் ஒரே வாரத்துல புதுமைப்பித்தன் சிறுகதைகள், தி.ஜானகிராமனின் அம்மா வந்தாள், மோகமுள் எல்லாம் படிச்சுட்டுப் போய் அவர்கிட்ட சொன்னேன். என்னை அஸிஸ்டெண்டா சேர்த்துக்கிட்டார். அடிச்சுச் சொல்லிக் கொடுக்க வேண்டியதை அடிச்சுச் சொல்லிக் கொடுப்பார். அணைச்சு சொல்லிக் கொடுக்க வேண்டியதை அணைச்சு சொல்லிக் கொடுத்தார். நாளைக்கு சினிமாவுல நான் ஏதாவது பண்ணினேன்னா அதுக்கு முழு காரணம் பாலுமகேந்திராதான்.

அப்புறம் இயக்குநர் கதிர்கிட்ட சேர்ந்தேன். அவர் எனக்கு அண்ணன் மாதிரி. பர்சனல் லைஃப்ல அவர் குழந்தை மாதிரி. வேலைன்னு வந்துடா பேய் மாதிரி வேலை பார்ப்பார். ஆனால், அவரோட இருக்கறதுங்கறது உடல் ரீதியாவும், மனோ ரீதியாவும் நம்மை எதுக்கும் தயார் பண்ணிடும்'' என்று பொறிந்து தள்ளியவரிடம் 'பொல்லாதவன்' படம் பற்றி விசாரித்தோம்.

''இது சாதாரண வில்லன், கதாநாயகன் படம் மட்டும் கிடையாது. அதைத் தாண்டி நிறைய வாழ்க்கை முறைகளை இதுல சொல்ல மெனக்கெட்டிருக்கோம். நார்த் மெட்ராஸ் அண்டர்வேர்ல்ட் எப்படி இருக்கும்னு சின்னதா சொல்லியிருக்கோம். உடனே இதை ஒரு ரவுடி படம்னு நினைச்சுடாதீங்க. இது வேற...'' என்கிறார்!

தனுஷைப் பற்றிக் கேட்டால், ''நல்லா கோ-ஆபரேட் பண்றார். அப்போ 'பொல்லாதவன்' பட பிராஜக்ட் ஆரம்பிக்கக்கூட இல்லை. எனக்குக் கலயாணம்னு சொன்னதும், ஒன்றரை லட்ச ரூபாய் கொடுத்தார்!'' என்ற வெற்றிமாறனின் தற்போதைய ஆசையெல்லாம் 'பொல்லாதவன்' குறித்த நேரத்தில் வெளிவருவதுதானாம்.

**- எஸ்.பாலசுப்ரமணியம்**



# கல்கி



2007 செப்டெம்பர் 16
சர்வஜித் ஆவணி 30
மலர் : 66
இதழ் : 7

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## பாகிஸ்தானின் தலைவலி; பாரதத்தின் திருகுவலி!

முஷாரஃப் ஆட்சிக்கு எதிர்ப்பு, ராவல்பிண்டியில் ராணுவ வாகனத்திலும் ராணுவக் கிடங்கிலும் குண்டு வெடிப்புகளாக அதிர்ந்திருக்கிறது. தலத்திலேயே இருபத்தைந்து உயிர்களைப் பலி கொண்டிருக்கிறது. மேலும் பல உயிர்கள் ஊசலாடிக் கொண்டிருக்கின்றன!

இந்தியாவைக் குறிவைக்கும் பயங்கரவாதிகளுக்குப் புகலிடமும் மறைமுக ஆதரவும் தந்து ஊக்குவித்த பாகிஸ்தான் அதிபர், வளர்த்த கடா மார்பில் பாயும் அனுபவத்தைச் சந்தித்திருக்கிறார்.

பாகிஸ்தானில் முஷாரஃபுக்கு இரண்டு விதமான எதிர்ப்புகள்- ஒன்று ஜனநாயகத்தையும் சட்டத்தின் ஆட்சியையும் விரும்புவோர் அவரது ராணுவ ஆட்சியை நிராகரிப்பது; மற்றது, தீவிர, இஸ்லாமிய சார்புள்ள குழுக்கள் அவரது அமெரிக்கக் கூட்டுறவை வெறுப்பது. (குறிப்பாக, ஆஃப்கானிஸ்தானைக் குண்டு மழை பொழிந்து அமெரிக்கா தாக்கியபோது, அந்தப் பாதகத்துக்கு முஷாரஃப் துணை நின்றதை இஸ்லாமிய அமைப்புகள் மன்னிக்கத் தயாராயில்லை.) இவற்றுள் எது ராவல்பிண்டி குண்டு வெடிப்புகளுக்குக் காரணம் என்பதை இப்போது அறுதியிட்டுச் சொல்ல முடியாவிட்டாலும் இருவித எதிர்ப்புகளும் வலுத்து வருவது தெளிவாகத் தெரிகிறது.

பாகிஸ்தானில் வரவிருக்கும் தேர்தலில் முஷாரஃப், பேனசிர் புட்டோவுடன் கூட்டணி வைத்துக் கொண்டு போட்டியிட முற்பட்டிருப்பதும், அந்த முடிவுக்கு அமெரிக்காவின் ரகசிய உந்துதல் காரணமாக அமைந்திருப்பதும்கூட எதிர்ப்புச் சக்திகளின் கோபத்தைத் தூண்டியிருக்கிறது.






இது நாள்வரை பரம எதிரிகளாக இருந்த பேனசிர் புட்டோவும், முஷாரஃபும் சந்தர்ப்பவாத கூட்டணி அமைக்க முற்படுவதைப் பாகிஸ்தான் மக்களால் ஏற்க இயலாது. ராணுவ ஆட்சியினால் நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்ட நவாஸ் ஷரீஃப், தாம் பாகிஸ்தான் திரும்பி தேர்தலில் போட்டியிடத் தீர்மானித்திருப்பதாகக் கூறுகிறார்.

முஷாரஃப் அதிகாரம் செலுத்தும்வரை பாகிஸ்தான் தேர்தல் ஜனநாயக முறையில் நடக்குமா என்பதும் மக்கள் ஆதரவு பெற்ற வலிமையான தலைமையும் நல்லாட்சியும் அங்கு அமையுமா என்பதும் கேள்விக்குறியே!

பாகிஸ்தானின் இந்தத் தலைவலி, இந்தியாவின் திருகுவலியாக முடிகிற சாத்தியக்கூறுகள் அதிகம்.

பாகிஸ்தான் அரசு பலவீனமாக இருக்கிறபோது, அங்கே ஆதிக்கம் செலுத்தும் தீவிரவாத, பயங்கரவாத சக்திகளின் ஆக்ரோஷமும் கொட்டமும் அதிகரித்து, இந்தியாவுக்குள் ஊடுருவுவதும், தாக்குதல் நடத்துவதும் சுலபமாகிறது. பங்களாதேஷிலிருந்து ஊடுருவி வரும் பயங்கரவாதிகளுக்கும் அதே காரணத்தால்தான் பணி சுலபமாகிறது.

ஆகவே, அண்டை அரசாங்கங்களின் பலவீனம் நமக்குப் புதிய புதிய சவால்களைத் தோற்றுவித்த வண்ணம் இருக்கும்.

அந்நாடுகளின் உள் விவகாரங்களில் அமெரிக்கா தலையிடுவதுபோல் நாம் தலையிட முடியாது; கூடவும் கூடாது. ஆனால், இந்திய அயலுறவுத் துறை வெறுமே மௌனம் காக்காமல், பாகிஸ்தானில் உண்மையான ஜனநாயகம் மலர வேண்டும் என்று உலக அரங்குகளில் பலமாகக் குரல் எழுப்ப வேண்டும். ஜனநாயகப் பற்றுள்ள யாருக்கும் இந்த உரிமை உண்டு.

காஷ்மீரில் தேர்தல்கள் நடந்தபோது, உலகப் பார்வையாளர்கள் அனுமதிக்கப்பட்டார்கள். அதுபோல் பாகிஸ்தான் தேர்தலிலும் உலகப் பார்வையாளர்களை அனுமதிக்கும்படி பிரதமர் மன்மோகன் சிங், சர்வதேச அரங்குகளில் வலியுறுத்திக் கேட்க வேண்டும்.

உலக அரங்குகளில் இக் கருத்துகள் எதிரொலிக்கப்படும்போது அதை சர்வாதிகாரி முஷாரஃபினால்கூட அலட்சியம் செய்ய முடியாமல் போகும். ●



நாட்கள் தங்கி இருக்கும்படி அனுப்பி வைத்தார் மகாத்மா. பத்து நாட்கள் தங்கி இருந்துவிட்டு அவர்கள் டெல்லிக்குப் புறப்பட்ட சமயம், ''காந்திஜிக்கு ஏதாவது செய்தி சொல்ல அனுப்ப விரும்புகிறீர்களா?'' என அவர்கள் கேட்டபோது ரமண மகரிஷி, ''இதயங்கள் பேசிக்கொண்டிருக்கும்போது, அங்கே வார்த்தைகளுக்கு வேலை இல்லை'' என்று சொல்லிவிட்டார்.

''ரமண மகரிஷியின் கையில் ஏற்பட்ட புற்றுநோய்க்கு மருத்துவர்கள் மயக்க மருந்து இல்லாமலேயே அறுவை சிகிச்சை செய்து கொண்டிருந்தனர். ரத்தம் வழிந்து கொண்டிருந்தபோதும், அவர் எதுவுமே நடக்காதது மாதிரி அமைதியாக இருந்தார். மகாத்மாவின் மரணச் செய்தியை ரேடியோவில் கேட்டபோதுகூட அமைதியாகத்தான்

# பேசிக்கொண்ட இதயங்கள்!



''இன்றைக்கு மகாத்மா காந்தி இருந்தால்...? நாட்டில் நடக்கும் வன்முறையையும், எதையும் அரசியலாக்கும் அக்கிரமத்தையும் கண்டு கண்ணீர் விட்டிருப்பார்'' என்றார் இளையராஜா. 'Eternal Gandhi' என்ற புத்தகத்தை சென்னை 'லேண்ட்மார்க்' புத்தகக் கடையில் நடந்த நிகழ்ச்சியில் வெளியிட்டுப் பேசியபோது இப்படிக் குறிப்பிட்டார். மேலும், இன்றைய தலைமுறையினரே, காந்தி திரைப்படம் வந்த பிறகுதான் அவரைப் பற்றி முழுமையாக அறிந்துகொண்டார்கள். அடுத்த தலைமுறைக்குக் காந்தியை அறிமுகப்படுத்த வேண்டியது நம் கடமை'' என்று கூறினார்.

''1935ல் ஜனாதிபதி ராஜேந்திரப் பிரசாத்தின் நண்பர்கள், சிலர் மனவாட்டமுற்றபோது, அவர்களை திருவண்ணாமலைக்குச் சென்று, ரமணாசிரமத்தில் சில

இருந்தார். ஆனால், அப்படிப்பட்ட ரமணரின் கண்களில்கூட மகாத்மா மரணத்தை ஒட்டி ஆசிரமத்தில் நடந்த இரங்கல் கூட்டத்தின்போது கண்ணீர் வந்தது'' என்று நா தழுதழுக்க நினைவு கூர்ந்தார் இளையராஜா.

– மௌலி

கதை: படுதலம் சுகுமாரன்

# சி.ஐ.டி. விஷ்வா

## துப்பறியும்

# இறந்தவனைத் தேடு

## 7

சி.ஐ.டி.விஷ்வா, தன் வீட்டுக்குத் திரும்புகிறார்.

இறந்தவனைத் தேடாதே இறந்து விடுவாய்

யார் வேலை இது!

யோசனையுடன் கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழையும் விஷ்வாவை அழைக்கிறது அலறும் போன்.

ஹலோ...

இறந்தவனைத் தேடாதே...

ஹலோ... யார் நீ...

தேடினால் இறந்து விடுவாய்...

'டொக்'

இப்படித் தொடர்ந்து மிரட்டல் வருதுன்னா, அந்த மூர்த்தி உயிரோட இருக்கான்னுதான் அர்த்தம்!

படம்: ஜெயராஜ்


மனசுக்குள் ஒரு குறுகுறுப்பு!
ஜன்னல் அருகில் போய், ஸ்க்ரீனை விலக்கிப் பார்க்க... வெளியில் வினோத் நிற்பது தெரிகிறது.
இவன் எங்கே, இங்கே...


ஹலோ வினோத்... கமான்...


உள்ளே வந்த அந்த வினோத் முகம் கலவரத்துடன் இருக்கிறது.
என்ன வினோத்...
அண்ணனைக் கொன்னது போல, என்னையும் கொல்ல சதி நடக்குது...


எதை வெச்சு அப்படிச் சந்தேகப்படறீங்க..?
சந்தேகம் இல்லே... உறுதி! லாரி ஏத்திக் கொல்லப் பார்த்தாங்க...
தற்செயலா நடந்திருக்கும். லாரிங்க தாறுமாறா ஓடுதே...


லாரிக்குள்ள தர்மா இல்லேன்னா நானும் அப்படித்தான் நம்பியிருப்பேன்.
தர்மாவா...?


ஆமாம், மூர்த்தியோடு சேர்த்து அவனைப் பார்த்திருக்கேன். இரண்டு நாள் முன்பு தாம்பரம் போயிருந்தப்போ, எதேச்சையா மூர்த்தியைப் பார்த் தேன்..
அடிக்கடி தாம்பரம் போறீங்க போல...?


தாம்பரத்துக்கு நண்பர் வீட்டுக் கல்யாணத்துக்குப் போனபோதுதான், தற்செயலா மூர்த்தியின் மனைவியைப் பார்த்தேன்... சந்தேகம் வந்து புகார் பண்ணினேன். மீண்டும் கண்ணில் தட்டுப்படுவா ளானு பார்க்க அப்பப்ப போறதுண்டு..."
"ம்..."
அப்படி போனபோதுதான், தர்மாவைப் பார்த்தேன்.
தொடரும்.




# ஓராடை மனிதர்!

எளிமைக்கும் நேர்மைக்கும் உதாரணமாக வாழ்ந்தவர் ஜீவா. அண்மையில் அவருடைய நூற்றாண்டு விழா அவர் வாழ்ந்த தாம்பரத்தில், தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் கொண்டாடப்பட்டது. ஜீவா நினைவு மலர் வெளியிடப்பட்டு, கலை இரவு, தெருக்கூத்து, வில்லிசை, பெரிய மேளம், கானா, கிராமியப் பாடல்கள் என விழா களை கட்டியது. கலை இரவில் பேசிய இரு எழுத்தாளர்களின் உரையிலிருந்து....

**பொன்னீலன்:**

**தா**ம்பரத்தில் ஒரு பள்ளிக்கூடத்தைத் திறந்து வைப்பதற்காக வந்திருந்தார் முதலமைச்சர் காமராஜர். அந்த விழாவுக்கு ஜீவா வரவில்லை. விழாவை ஏற்பாடு செய்தவர்களிடம், 'ஜீவா ஏன் வரவில்லை?' என்று கேட்ட காமராஜர், 'நானே நேர்ல போய்ப் பாக்கறேன்' என்று கிளம்பிவிட்டார். ஜீவாவின் குறுகலான குடிசை வீட்டின் பின்புறம், ஜீவா தம் வேட்டியின் ஒரு நுனியை ஒரு மரத்தில் கட்டி, மறு நுனியைக் கையில் பிடித்து, வெயிலில் காய வைத்துக் கொண்டிருந்தார். 'நீங்க ஏன் விழாவுக்கு வரலை?' என்று காமராஜர் கேட்க, 'உடுத்திக்கறதுக்கு இதைத் தவிர நல்ல வேட்டி எதுவும் இல்லை. இது காய்ஞ்சதும் வரலாம்னு இருந்தேன்' என்றார் ஜீவா.

'இந்தச் சின்ன வீட்ல இருந்துக்கிட்டு ஏன் கஷ்டப்படுறீங்க? அரசாங்கச் செலவுல நான் உங்களுக்கு ஒரு நல்ல வீடு கட்டித் தர்றேன்' என்று காமராஜர் சொல்ல,

'இங்க 1500 குடும்பங்கள் குடிசையிலதான் வாழ்ந்துக்கிட்டு இருக்கு. அத்தனை பேருக்கும் வீடு கட்டிக் கொடுக்கும்போது எனக்கும் வீடு கட்டிக் கொடுங்க'' என்றார் ஜீவா.

**ஜெயகாந்தன்:**

ஜீவாவுக்கு வீடு இல்லையே என்று காமராஜர் வருத்தப்பட்டார். வீடு இல்லையென்றாலும் ஜீவாவுக்குக் குடும்பம் என்ற ஒன்று இருந்தது. காமராஜருக்குக் குடும்பம்கூட இல்லை. அந்தக் காலத்தில் குடும்பம் இருந்தாலும் சாமியார் போல வாழ்ந்தார்கள். ஆனால் இன்றைக்குப் பல சாமியார்களே குடும்பமாகத்தான் வாழ்கிறார்கள்.

– சத்யா



# முதுகை நிமிர்த்தும்

## முதுகுத்தண்டு வளைவுக்குப் பாரம்பரியமும் ஒரு காரணம்!

**ந**ம் முதுகெலும்பு நேரானதல்ல. கழுத்துப் பகுதி, இருப்பின் மேற்பகுதி, இடுப்பின் கீழ்ப் பகுதி ஆகிய இடங்களில் வளைவுகள் இருக்கத்தான் செய்யும். ஆனால், இந்த வளைவுகள் அளவுக்கு அதிகமானால்? பார்ப்பதற்கு உறுத்தலாக இருக்கும் என்பதோடு, பலவிதத் தீங்குகளைக் கொண்டுவரக் கூடும். சில அதீத வளைவுகளால் இதயமும் நுரையீரலும் நெருக்கப்பட்டு, மரணத்தில்கூட முடியலாம்!

பொதுவாக மூன்று வித அறுவை சிகிச்சைகளில் ஏதேனும் ஒன்றின் மூலம் இந்த வளைவைச் சரிசெய்வது வழக்கம்.

ஒன்று, முதுகுப்புறத்தைத் திறந்து வளைந்த முதுகெலும் பின் இருபுறமும் தண்டுகளை வைத்து அதை நேராக்குவது. இரண்டாவது, மார்புப் பகுதியைத் திறந்து வளைந்த முதுகெலும்பை மேற்படி நேராக்குவது. சில சமயம் மார்பு, முதுகு ஆகிய இருபுறங்களையும் திறந்து இந்த சிகிச்சையைச் செய்ய வேண்டியிருக்கும். இந்த மூன்று முறைகளிலுமே உள்ள முக்கிய குறைபாடு, முது கெலும்பு முழுவதுமாகவே இறுக்கப்படுவதால் அதன் வளர்ச்சி பெரிதும் தடைபடுகிறது.



மதுரை அருகிலுள்ள ஒரு சிறு நகரத்தைச் சேர்ந்த சிறுமி ஜெயஸ்ரீ. போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒருவரின் மகளான இவள் ஒன்றாம் வகுப்பு படிக்கிறாள். இவள் முதுகெலும்பு மிகவும் வளைந்துவிட, மற்றவர்கள் அவளை வித்தியாசமாகப் பார்க்கத் தொடங்கினர். இது தானாகச் சரியாகிவிடும் என்று தொடக்கத்தில் நம்பிய அவளது பெற்றோருக்குப் பிறகு உண்மை புரிந்தது. ஆங்கில மருத்துவத்தில் அறுவை சிகிச்சைதான் தீர்வு என்பதால், மாற்று மருத்துவத்தை நாடினார்கள்.

ஆங்கில மருத்துவ முறையில் வேறொரு சங்கடமும் உண்டு. குழந்தைப் பருவம் முழுவது மாக கடந்த பிறகுதான் - அதாவது முதுகெலும் பின் வளர்ச்சி ஓரளவு நிலைபெற்ற பிறகுதான் மேற்படியான 'ஃப்யூஷன் சர்ஜரி' செய்ய முடியும். அதுவரை தினமும் பதினெட்டு மணி நேரங்களுக்கும் அதிகமாக சிலவகை க்ளிப்புகளைப் பொருத்திக் கொண்டு அந்தக் குழந்தைகள் அவஸ்தைப் பட வேண்டியிருக்கும்.



இதற்குத் தீர்வு காணும் வகை யில் இந்தியாவில் முதல்முறை யாக ஒரு புதிய முயற்சியை

செய்திருக்கிறது அப்போலோ மருத்துவமனை. ஸ்டே பிள் சிகிச்சை என்றழைக்கப்படும் இதனைச் செய்தது முதுகெலும்பு சர்ஜன் டாக்டர் சாஜன் ஹெக்டேவின் தலைமையில் அமைந்த மருத்துவக் குழு. நிக்கல் மற்றும் டைட்டானியம் சரிவிகிதத்தில் கலந்த ஸ்டேப் பிள்களை முதுகெலும் பின் பல்வேறு பகுதிகளில் வைத் துப் பொருத்தி விடுகிறார்கள். இவற்றைப் பொருத்தி விடுவதால் முதுகெலும்பின் வளர்ச்சி தடைபடுவ தில்லை என்பது கூடுதல் சிறப்பு. வளரும் பருவத்தி லேயே சிகிச்சையைச் செய்ய முடிகிறது.

“இந்த வகை அறுவை சிகிச்சை யில் முன்னோடியாக இருப்பவர் ஃபில டெல்பியாவைச் சேர்ந்த டாக்டர் ர்ராண்டி பெக்ஸ் என்பவர். இந்த வகை ஸ்டேபிள் களை உருவாக்கியவரே அவர்தான். இந்த நவீன அறுவை சிகிச்சை இதுவரை அமெ ரிக்காவில் நான்கு முறையும் ஐரோப்பாவில் மூன்று முறையும்தான் நடந்திருப்பதாக அவர் கூறினார்” என்றார் டாக்டர் ஹெக்டேவின். “இப் படிப் பொருத்தப்பட்ட ஸ்டேபிள்களை நாளடை வில் வேறொரு சிகிச்சையின் மூலம் நீக்க வேண்டி யிருக்குமா?” என்றோம். “இல்லை” என்றவர். “இந்த வகை ஸ்டேபிள்கள் இந்தியாவில் தயாராவதில்லை என்பதால் விலை அதிகமாகவே இருக்கிறது. ஒரு ‘செட்’டுக்கு 1.8 லட்ச ரூபாய்” என்றார்.



# ஸ்டேப்பிள்!

★ சில குழந்தைகளுக்குப் பிறக்கும்போதே இந்த முதுகு வளைவு தொடங்கிவிடுகிறது.

★ இந்த வளைவு ஏற்பட என்ன காரணம் என்பது உறுதியாகக் கண்டுபிடிக்கப்படவில்லை. எனினும் பரம்பரை ஒரு காரணமாக இருக்கலாம் என்பவர்களும் உண்டு.

★ பெண்களிடம் இது அதிகமாகக் காணப்படுகிறது. முக்கியமாக எட்டிலிருந்து பத்து வயதுச் சிறுமிகளுக்கு.

★ அறுவை சிகிச்சைக்குப் பின் தொடர்ந்து பிசியோதெர பிஸ்ட்டின் சேவை தேவைப்படு மென்பதில்லை.

உங்கள் குழந்தையிடம் கீழ்க் கண்ட குறைபாடுகள் காணப் படுகிறதா? (இலேசாகவோ, தீவிரமாகவோ)

ஒரு தோள் மற்றதைவிட இறங்கியிருக்கிறதா?

இடுப்புப் பகுதியோடு ஒப்பிடும்போது தலை நடு வாகக் காட்சி தரவில்லையா?

மார்பெலும்புகள் வெவ்வேறு உயரங்களில் உள்ளனவா?

முதுகுத் தண்டைச் சுற்றி யுள்ள தோலில் குழிகள், வண்ண மாற்றம், அடர்த்தி யான ரோமப் பகுதிகள் ஆகி யவை உண்டாகியுள்ளனவா?

உடலின் ஒரு பகுதி ஒரு பக்கமாகச் சாய்ந்துள்ளதா?

“இவையெல்லாம் முது கெலும்பு வளைவைக் குறிக் கக்கூடிய எச்சரிக்கை மணி கள். கவனம் தேவை” என் கிறார் டாக்டர் சாஜன் ஹெக்டேவின்.

**– ஜி.எஸ்.எஸ்.**



★ சாஜன் ஹெக்டேவின்.

அம்பாள் ஸ்ரீ லலிதாம்பிகையை, யார் யார் எப்படியெப்படியெல்லாம் வழிபட நினைக்கிறார்களோ, யார் யாருக்கு எதுஎதுவெல்லாம் பொருத்தமாக வருகிறதோ, அந்தந்த முறைகளிலே வழிபடலாம் என்பதைச் சொல்பவைதான் ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமத்தின் ஆயிரம் திருநாமங்கள்.

இந்தத் திருநாமங்களைத் தொடர்ந்து பார்த்துக்கொண்டே வருகிறபோது, **பவானி** என்று ஒரு திருநாமம்.

பவன் என்று சிவனுக்கு ஒரு திருநாமம் உண்டு. பவன் பரமேசுவரன் என்பதால் பரமேசுவரியாக இருக்கக் கூடியவள் சம்ஸார ஸாகரம் என்று குறிப்பிடுகிறோம்.

அம்பாளை பவரோக நிவாரிணி என்று பிறவிப் பிணியைத் தீர்க்கக் கூடியவளாகக் குறிப்பிடுகிறோம்.

அப்படியானால் இந்த மூன்றுமே பவம் என்று சொன்னால், அம்பாளுக்கு பவானி என்ற திருநாமம் ஏன் ஏற்பட்டது? எப்படிப் பொருந்தும்? இதற்கு ஒரு வியாக்யானம் உண்டு:

ம்ருத்யோ பவோ - என்கிற ஈசுவரனுக்கும் சரி

பவன் - என்கிற காமனுக்கும் சரி

பவம் - என்கிற சம்ஸார சாகரத்துக்கும்

# ஸ்ரீ லலிதா

## ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாம விளக்கம் ✣ இரண்டாம் பாகம்

பவானி. பவன் என்றால் உற்பத்திக்குக் கர்த்தாவாக இருக்கக் கூடியவர்; படைக்கக் கூடியவர் என்று பொருள். இந்த உலகத்தை யார் சிருஷ்டிக்கக் கூடியவர் என்று பார்த்தால் அவர் சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மா கூட அல்ல; எல்லாவற்றுக்கும் மூலகாரணமாக இருக்கக் கூடியவன் பரமேசுவரன் தான். அந்த மூலகாரணமான பரமேசுவரனைக் குறிப்பதே பவன் என்கிற திருநாமம்.

பவம் என்பதை இன்னொரு இடத்திலும் சொல்வதுண்டு. இரண்டு பேருக்கு பவன் என்று பெயர் உண்டு - ஒன்று பரமேசுவரன், இன்னாருத்தர் யார் என்றால், சாக்ஷாத் காமேசுவரனாக இருக்கக் கூடிய மன்மதன். மன்மதனுக்கும் பவன் என்று ஒரு திருநாமம் உண்டு.

பவன் என்று சொல்கிறபோது அது ஒரு வடிவத்தைக் குறிக்கிறது. அதையே **பவம்** என்று சொல்கிறபோது, அது சம்ஸார ஸாகரத்தைக் குறிக்கிறது. அதனால்தான் பிறவிப் பெருங்கடலை



சரி, பிராணனாக இருக்கக் கூடியவள் தேவி - பவானி.

மன்மதன் சாம்பலாகிப்போன பிறகு அவனுக்கு அம்பாள்தான் உயிர் கொடுத்திருக்கிறாள். சஞ்சீவன ஔஷதியாக இருக்கக் கூடியவள்.

அந்த சஞ்சீவன ஔஷதி இல்லையென்றால் மன்மதனுக்கு ஜீவனே கிடையாது; உயிரே கிடையாது!

மன்மதனுக்கு உயிரைக் கொடுத்தவளே ஸம்ஸார ஸாகரத்தில் இருக்கக் கூடிய ஜீவன்களுக்கெல்லாம் அசைவைக் கொடுக்கக் கூடியவள். அந்த ஜீவன்களுக்குப் பிராணனாக இருக்கக் கூடியவள். காமேசுவரனுக்கும் பிராணனாக இருக்கிறாள்.

பவானி என்ற திருநாமம் இந்த மூன்றுக்குமே பொருந்தி வரும். - மன்மதனைக் காப்பாற்றிக் கொடுத்து, இந்த ஜீவன்கள் எல்லாரையும் உலக வாழ்க்கையைப் பிரதானமாக நினைத்து இயங்கச் செய்து, "ஆஹா நான் அதைப் பண்ணிவிட்டேன்,

**சுதா சேஷய்யன்**

இதைப் பண்ணிவிட்டேன்'' என்று நம்பி பெருமைகொள்ள காரணமாக இருக்கக் கூடியவள் அம்பாள்தானே. அதே மாதிரி, நிர்குணமாக இருக்கக்கூடிய பிரம்மத்தை - (பரமேசுவரனை) அசைய வைத்து, அதனால் ஜகத் வியாபாரத்தைச் செய்விக்கிறவளும் அந்தப் பரமேசுவரி. எனவே, இந்த மூன்றுக்கும் காரணமான அவள் தேவி - பவானி.

## அழகான காட்சி

**ஆ**சார்யர் (ஆதி சங்கரர்) இந்த பவானி என்ற திருநாமத்தை வைத்துக் கொண்டு ரொம்ப அழகான ஒரு காட்சியைக் கொண்டு வருவார்:

''பவானி'' என்றவாறு அம்பாளிடம் போய் ஒருத்தன் நமஸ்காரம் செய்தான்.

''எனக்குப் பிராணனைக் கொடுத்தவளே!'' என்கிற அர்த்தத்தில் அவன் ''பவானி பவானி'' என்று அழைத்துப் பணிய முற்பட்டான்.

சாதாரணமாக, ரொம்பப் பெரிய மனிதர்களைப் பார்க்கப் போகிறபோது, ரொம்பப் பயமாக இருக்கும்; கொஞ்சம் பதற்றமும் வரும். எதையோ கேட்க வேண்டும் என்று ஆரம்பித்து எங்கேயோ போய் முடிப்போம்.

அந்த மாதிரி, அம்பாளிடம் போய் ''பவானி'' என்று அழைத்துப் பேச நினைத்தவனுக்குப் பதற்றம் வந்தது.

பேசுகிறபோது சாதாரணமாக நாம் கமா, ஃபுல்ஸ்டாப் என்று நிறுத்துக் குறிகள் போட்டுப் பேசுவதில்லை. ஆதிகாலத்தில் தமிழ் நூல்களிலும் சரி, கிரந்த எழுத்துக்களிலும் சரி, கமா, ஃபுல்ஸ்டாப்பெல்லாம் போட்டிருக்காது! ஆனால் அந்த நூல்களில் ஆழ்ந்து போனவர்களுக்கு, எங்கே நிறுத்த வேண்டும், எங்கே பிரிக்க வேண்டும் என்பது நன்றாகவே தெரியும். நிறுத்துக் குறிகளை நாம் மேற்கத்திய நாடுகளிடமிருந்துதான் கற்றோம். ஆனால் அங்கே கூட, முதலில் அந்த நிறுத்துக் குறிகள் மிகவும் குழப்பமாகத்தான் இருந்தன. ருட்யார்ட் கிப்ளிங்கின் கவிதைகள் பற்றிச் சொல்லுவார்கள்: பங்சுவேஷன்ஸ் ஆர் கேயாடிக் - (நிறுத்துக் குறிகள் ஏக குழப்பமாக உள்ளன) என்று. பத்து வரிகளுக்கு நிறுத்துக் குறியே இராது. அது பாட்டுக்குப் போய்க் கொண்டே இருக்கும். அதற்கப்புறம் பார்த்தால், திடீரென்று அடுத்தடுத்து, அடுத்தடுத்து அவை நிறைய வரும்.



அம்மா! நான் உன்னுடைய தாஸன்; எனக்கு உன்னுடைய கருணை வேண்டும்;

பல பேர் பேசுவதுகூட இப்படித்தான்! 'பங்சுவேஷனே இல்லாமல் பேசிக் கொண்டே போகிறார்' என்று நாம் சொல்வதுண்டு. பேச ஆரம்பித்தால் ஐந்து நிமிடங்களுக்கு நீட்டி, நிறுத்தாமல் பேசிக் கொண்டே இருப்பார்; எங்கே ஆரம்பிப்பார் எங்கே முடிப்பார் என்றே தெரியாது!

பல சமயங்களில் நாம் பேசும்போது நமக்கே தெரியாமல்கூட த்வனி மாறுவது உண்டு. அப்படி மாறுகிறபோது, அர்த்தமே மாறிப்போகும்!

## கேட்ட கணத்திலே...

**''ப**வானி'' என்று அழைத்துக் கொண்டே அம்பாளைப் பணிந்த பக்தர் என்ன பண்ணினார் - ''பவானி! த்வம் தாஸே மயி'' என்று சொல்ல நினைத்தார். - அம்மா! நான் உன்னுடைய தாஸன்; எனக்கு உன்னுடைய கருணை வேண்டும்'' என்று கேட்பதற்காகப் போனார்.

''பவானி'' என்று கூறி நிறுத்திவிட்டு ''த்வம் தாஸே மயி'' என்று சொல்லியிருக்க வேண்டும். ஆனால், இவர் பதற்றத்தில் என்ன பண்ணினார் ''பவானி, த்வம்'' என்று சொல்வதற்குப் பதிலாக, ''பவானித்வம்'' என்று சேர்த்துச் சொல்லிவிட்டார். அவ்வளவு வேகம்! நமக்குக்கூட சில

சமயம் கேட்க வந்ததைக் கேட்காமல் மறந்து விடுவோமோ என்கிறபோது வாய் குழறும்! மனப்பாடம் பண்ணிய விஷயத்தை ஒப்பிக்கிறபோது கூட, எங்கேயாவது இடையில் நிறுத்தினால் மறந்து போய்விடுமோ என்று பயமாக இருக்கும். அதற்காக அவசரமாகச் சொல்லும்போது வார்த்தைகள் இணைந்துபோகும்! அந்த மாதிரிதான் அம்பாளிடம் போனவர் ரொம்ப வேகமாக 'பவானித்வம்' என்று கேட்டுவிட்டார்.

"அம்மா, நான் நீயாகவே ஆகவேண்டும்" என்று கேட்டால்கூட நடத்திக் கொடுக்கிறாள் அம்பாள்!



த்வம் என்ற விகுதி மிக அழகான பிற்சேர்க்கை. காளிதாஸனை மிகப் பெரிய கவிஞர், கவி என்போம். அவருடைய 'கவித்வம்' விசேஷமானது என்று சொல்கிறபோது, அவருடைய கவிதைகளின் தன்மை சிறப்பானது என்று அர்த்தம் ஆகிறது. ஆக, 'த்வம' வந்து ஒட்டுகிறபோது தன்மை யைக் குறிக்கும்.

'பவானித்வம்' என்றால் அம்பாளாக இருக்கக்கூடிய தன்மை. பவானியாக இருக்கக்கூடிய தன்மை.

''பவானித்வம்'' என்று சொன்னவர், வாக்கியத்தைக்கூட முடிக்கவில்லை, அம்பாள் காதில் 'பவானித்வம்' என்பது விழுந்தது; 'ஓஹோ! இவர் பவானித்வத்தை வேண்டுகிறார்' என்று உடனே ''இந்தா வைத்துக் கொள்''என்று கொடுத்துவிட்டாள்!

அப்படி அம்பாளாக இருக்கக்கூடிய தன்மையையே தரக்கூடியவள் அவள் - நிஜ ஸாயுஜ்ய பதவி அது. அதையே தந்துவிடுகிறாள்.

வெறுமே பதற்றத்தில் வார்த்தையைச் சேர்த்துச் சொன்னால்கூட, 'பவானித்வத்தைக் கேட்கிறாரே, அவருக்கு அதற்கான தகுதி இருக்கிறதா, இல்லையா?' என்றெல்லாம் அம்பாள் பார்க்கக் கூடியவள் இல்லை. பக்தர் கேட்டார் என்றவுடனேயே, அது எதுவாயிருந்தாலும் பரவாயில்லை என்று தானாகவே இருக்கக் கூடிய தன்மையைக்கூட அப்படியே கொடுத்துவிடுகிறாள்.

அப்படிக் கொடுத்துவிடுகிறதனாலே, அந்த பவானி என்ற வார்த்தைக்கே பிற்காலத்தில் என்ன வியாக்யானம் வந்தது தெரியுமா...?

**பவானி** என்று சொன்னால், **நான் ஆவேனாக** என்கிற பொருள் ஏற்பட்டது.

ஆகவே, பவானி உற்பத்திக்குக் காரணமாக இருக்கக் கூடியவள் என்கிற அர்த்தம் மாறி 'நான் நீயாக மாறவேண்டும்' என்பதாகவே ஓர் அர்த்தம் அந்தத் திருநாமத்துக்கு.

இப்படி, யார் எதைக் கேட்டாலும் கொடுக்கக் கூடியவள் அம்பாள். அதனால் தான் அவளிடம் 'அதிக வரம் பெறலாம்' என்று சொல்லப் பட்டிருக்கிறது.

''அம்மா, நான் நீயாகவே ஆக வேண்டும்'' என்று கேட்டால் கூட நடத்திக் கொடுக்கிறாள் அம்பாள்.

அப்படிப்பட்ட அழகான திருநாமம் பவானி.

பவானியாக இருக்கக் கூடியவள் என்ன செய்வாள் என்று சொல்லக் கூடியது அதற்குப் பின்னால் வருகிற திருநாமம்.

**(வளரும்)**

ஸ்ரீ லலிதா தொடருக்கான அத்தியாயங்கள், சென்னை, ஆழ்வார்பேட்டை, ஆஸ்திக சமாஜம் அமைப்பில் சுதா சேஷய்யன் நிகழ்த்திய உபன்யாஸத் தொடரின் ஒலிப்பதிவிலிருந்து தொகுக்கப்பட்டுள்ளன.

அது ஒரு ஏப்ரல் மாதம். காலை பத்து மணிக்கே வெயில் விளாசிக் கொண்டிருந்தது. நானும் ரமேஷும் டீக்கடையில் நின்று கொண்டிருந்தபோதுதான் அவளைக் கவனித்தேன். பஸ்ஸுக்காகக் காத்திருந்தாள்.

அவள் என்னைப் பார்க்கவில்லை. அவளைப் பார்த்த கணத்திலேயே என் உள்ளேயிருந்த ஒரு குளம் தளும்பத் தொடங்கியிருந்தது.

'செல்விதானா அது? அவளேதான்! இங்கே எப்படி வந்தாள்?'

''போலாமாடா?''

ரமேஷ் என் தோளைத் தொட்டதும் திடுக்கிட்டுத் திரும்பினேன்.

''போலாம்...''

நடந்துகொண்டே திரும்பி அவளைப் பார்த்தேன். அவள் வேறெங்கோ பார்த்துக் கொண்டிருந்தாள்.

''ரமேஷ்! நீ போய்ட்டே இரு. தொண்டை கரகரன்னு இருக்கு. ஒரு ஹால்ஸ் வாங்கிட்டு வந்துர்றேன்.''

ரமேஷின் பதிலை எதிர்பார்க்காமல் திரும்பி 'விடுவிடு'வென நடந்தேன்.

'அவளுக்கு என்னை அடையாளம் தெரியாமலா இருக்கும்?'

அவள் குடையை மடக்கிப் பிடித்தபடி, அப்போதுதான் வந்து நின்ற ஒரு பஸ்ஸில் ஏறிக்கொண்டிருந்தாள். நான் போவதற்குள் பஸ் கிளம்பியிருந்தது.

'நிச்சயம் அவள் என்னைப் பார்த்திருக்கமாட்டாள். பார்த்திருந்தால் பேசாமல் போகமாட்டாள்.'

அவளைப் பார்த்ததும் ஏற்பட்ட

# மயங்குகிறாள் மாது!



உதறலில் அவளிடம் பேசாமல் விட்ட தற்காக நொந்துகொண்டேன்.

## காதல் பொன்மொழிக் கதை-7

## பாலுசத்யா

அலுவலகம் வந்தபோது டைரக்டர் வந்திருந்தார். ஒரு புதுப் படத்துக்கான டிஸ்கஷனில் நாங்கள் இருந்தோம். அன்றைய டிஸ்கஷனில் என்னை ஒட்டவிடாமல் எனக்குள்ளே செல்வி சிரித்துக் கொண்டிருந்தாள்.

''நானும் காலையிலிருந்து பாக்கறேன். ஏண்டா ஒரு மாதிரி இருக்கே?'' என்று கேட்டான் ரமேஷ்.

''அதெல்லாம் ஒண்ணும் இல்லடா.''

ரமேஷிடம் எப்படிச் சொல்வது? சொன்னாலும் அவனுக்குப் புரியுமா?

தற்செயலாக நடக்கிற சில நிகழ்வுகள் ஒரு மனிதனின் வாழ்க்கையையே புரட்டிப் போட முடியுமா? முடியும்.

அதற்கு என் வாழ்வே உதாரணம்.

வேலையில் மனம் ஒட்டாமல் ரூமுக்குத் திரும்பினேன்.



என் திருவல்லிக்கேணி அறை குப்பையாகக் கிடந்தது. வேலு கட்டிலில் குறுக்காகக் கால்களைப் பரப்பித் தூங்கிக் கொண்டிருந்தான்.

நான் உடை மாற்றிக்கொண்டு, மேல் பரணிலிருந்த என்னுடைய சூட்கேஸைத் திறந்து, அதனடியிலிருந்த ஒரு டைரியை எடுத்துக்கொண்டு, மொட்டை மாடிக்குப் போனேன். தெரு விளக்கிலிருந்து மாடியில் விழுந்த மங்கலான வெளிச்சத்தில் டைரியைப் பிரித்து, அந்தப் புகைப்படத்தை எடுத்தேன். புகைப்படத்தில் ரெட்டை ஜடை போட்ட யூனிஃபார்ம் அணிந்திருந்த செல்வி, கலெக்டரிடமிருந்து ஒரு கோப்பையை வாங்கிக் கொண்டிருந்தாள்.

வானத்தில் இரைச்சலோடு, சிவப்பு விளக்கு மின்ன, ஒரு விமானம் பறந்து போனது. கூட்டமாக நட்சத்திரங்கள். சென்னையில் இப்போது எத்தனை பேருக்கு ஆசுவாசமாக வானத்தைப் பார்க்க அவகாசமிருக்கிறது? எங்களுக்கு இருந்தது.

செல்வியும் நானும் பக்கத்துப் பக்கத்து வீடுகளில் வசித்தோம். நான் ப்ளஸ்டூ படித்தபோது, அவள் பத்தாவது படித்துக் கொண்டிருந்தாள். இருவரும் ஒரே பள்ளியில் படித்தோம். மாலை நேரங்களில் எங்கள் காம்பவுண்டுப் பிள்ளைகளும், செல்வி

வீட்டுக் காம்பவுண்டு பிள்ளைகளும் படிக்கிறோம் என்கிற பெயரில் காட்டுக் கூச்சல் போட்டுக் கொண்டிருப்போம். செல்வி எதைப் பற்றியும் கவலைப்படாமல், எதிலும் கவனத்தைச் சிதறிவிடாமல் நடந்தபடியே படிப்பாள். ரேகை தெரியாத இருட்டு கவிகிறவரைப் படிப்பாள்.

**ஸ்**கூல் பிரேயர் வாரத்துக்கு



**ஒ**ரு சமயம் நாத்திக எண்ணம் கொண்ட செல்வந்தர் ஒருவர் இராம கிருஷ்ண பரமஹம்சரைச் சந்தித்த போது, "சுவாமி, தாங்கள் இறைவனுக் காகத் தங்கள் வாழ்க்கையைத் துறந்துவிட்டதாகக் கேள்விப்பட்டேன்" என்றார். உடனே பரமஹம்சர் புன்னகை தவழ, "நான் ஒரு துறவியாக இருக்கலாம். ஆனால், என்னைவிட நீங்கள்தான் பெரிய துறவி" என்றார். செல்வந்தர் திகைத்துப் போனார். "உங்களைவிட நான் பெரிய துறவியா, அது எப்படி?" "ஐயா, நானோ இறைவனுக்காக என் வாழ்க்கையைத் துறந்தேன். நீரோ சுகபோக வாழ்க்கைக்காகக் கடவுளையே துறந்துவிட்டீர். ஆகவே, என்னைவிட நீர்தானே பெரிய துறவியாகிறீர்" என்றார்.

– அ.சா.குருசாமி, செவல்குளம்

இருமுறை திங்கள், வெள்ளி தினங்களில் நடக்கும். ராமசுப்புவும் செல்வியும்தான் பிரதானப் பாடகர்கள். ராமசுப்பு திங்கள் கிழமை பாடுவான். செல்வி வெள்ளிக் கிழமை பாடுவாள். 'நீராடும் கடலுடுத்த...' பாடலை செல்வி பாடி தமிழ்த் தாய் கேட்க வேண்டும். அப்படியொரு மதுரக் குரல்.

**நா**ன் கல்லூரியில் இரண்டாமாண்டு படித்துக் கொண்டிருந்தேன். செல்வி ப்ளஸ்டு. மொட்டை மாடியில் வாண்டு களின் இரைச்சல்களில்லாத சந்தர்ப்பம் ஒன்று வாய்த்தபோது, நானும் அவளும் மட்டுமே தனிமையில் இருந்த ஒரு சந்தர்ப்பத்தில் அவளிடம் வாய்விட்டுக் கேட்டேன்.

"செல்வி! எனக்காக ஒரு சினிமா பாட்டுப் பாடேன்!"

அவள் என்னை ஆச்சரியமாகப் பார்த்தாள். எங்கள் மொட்டை மாடிக்கருகே நெருங்கி வந்து, "மயங்குகிறாள் ஒரு மாது...

தன் மனதுக்கும் பெயருக்கும்...

அவள் பாடப்பாட ஒரு பரவசம், என் உச்சந்தலை வரை ஏறியது.

'படீ'ரென்று ஒரு சத்தம் கேட்க, திடுக்கிட்டுக் கண்களைத் திறந்தேன்.

"பாட்டா பாடறே பாட்டு!"

செல்வியின் அப்பா செல்வியை கன்னாபின்னாவென்று அடித்துக் கொண்டிருந்தார்.

"நாயே!.. போடி கீழே!"

செல்வி புத்தகத்தை வாரிக் கொண்டு பதற்றத்துடன் கீழே ஓடினாள்.

நான் பதில் பேசாமல் மொட்டை மாடியிலிருந்து கீழே இறங்கினேன்.

அடுத்த மாதமே செல்வியின் குடும்பம் வீட்டைக் காலி செய்துகொண்டு வேறெங்கோ இடம்பெயர்ந்தது. அதற்குப் பிறகு நான் செல்வியைப் பார்க்கவே இல்லை.

ஆனால், உள்ளுக்குள் ஓர் உறுத்தல் இருந்துகொண்டே இருந்தது. செல்வி ஏன் நான் கேட்டதும் அந்தப் பாடலைப் பாடினாள்? 'மயங்குகிறாள் ஒரு மாது...' உண்மையில் அர்த்தம் தெரிந்துதான் பாடியிருப்பாளோ?

இந்த நினைவு வரும்போதெல்லாம் யாருக்கும் தெரியாமல் நான் அழுதேன். இதற்குப் பெயர்தான் காதலா? எனக்குத் தெரியவில்லை.

**நா**ன் மொட்டை மாடியிலிருந்து இறங்கி அறைக்கு வந்தேன். நான் எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்தி, அறையைப் பெருக்கிச் சுத்தம் பண்ணிவிட்டுத் தரையில் படுத்தேன். தூக்கம் வரவில்லை.

'அவள் எங்கேயிருக்கிறாள்? நடந்து வந்து பஸ் ஏறியதைப் பார்த்தால் சாலிகிராமத்தில்தான் எங்கோ இருக்க வேண்டும்.'

இந்த எண்ணம் தோன்றிய பிறகு எனக்கு இருப்புக் கொள்ளவில்லை. அப்

படியே தூங்காமல் விழித்துக் கிடந்தேன். காலை ஐந்து மணிக்கே சாலிகிராமத்துக்குப் போனேன்.

பொழுது புலரத் தொடங்கிய அந்த ஆறுமணிப் பொழுதில் சாலிகிராமம் அழகாக இருந்தது. வாசல் தெளித்துக் கோலம் போட்ட ஒன்றிரண்டு பெண்களைத் தவிர, வீடுகளும் மனிதர்களும் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தார்கள்.

என் நம்பிக்கை வீண் போகவில்லை. ஏழு மணிக்கு செல்வியைப் பார்த்துவிட்டேன். சாலிகிராமத்திலிருந்து இளங்கோ நகருக்குப் பிரியும் தெருவில், ஒரு கடையில் செல்வி பால் பாக்கெட் வாங்கிக் கொண்டிருந்தாள். கடையிலிருந்து திரும்பியவள், என்னைப் பார்த்து ஒரு கணம் திகைத்து நின்றாள்.

''மணி... மணிதானே நீங்க?''

''ஆமா.''

''மணி... இங்கயாயிருக்கே? எப்படியிருக்கே?''

சட்டென்று என் கையைப் பற்றிக் கொண்டாள்.

''நல்லாயிருக்கேன்.''

''வா... வா! வீட்டுக்குப் போலாம்.'' அவள் என்னைப் பேசவே விடவில்லை.

செல்வி ஒரு காம்பவுண்டு வீட்டில் இருந்தாள். பதினைந்துக்குப் பத்து அறை. அவள் விரித்துப்போட்ட பாயில் அமர்ந்துகொண்டேன்.

''ஏன் செல்வி! தனியாவா இருக்கே?''

''ஆமா...''

''அம்மா... அப்பால்லாம்...''

''அது பெரிய கதை. நம்ம தெருவுலேர்ந்து ஒரேயடியா மாத்திக்கிட்டு அழகர் கோயிலுக்குக் கூட்டிட்டுப் போயிட்டாரு அப்பா. பழகின ஜனங்களும் வாய் பேசறதுக்கு மனுஷங்களும் இல்லாம அம்மா ரொம்ப நொந்து போனாங்க. அப்பாவைப் பொறுத்தவரைக்கும் பாட்டுப் பாடுற பொம்பளைங்கன்னா கூத்தாடின்னு அர்த்தம். நான் இப்படி வளர்ந்ததுக்குக் காரணம் அம்மாதானாம். என்னோட படிப்பையும் நிறுத்திட்டார். அம்மா தற்கொலை பண்ணிக்கிட்டாங்க. நான் ஒடைஞ்சு போனேன். சொல்லாமக் கொள்ளாம ஒரு நாளு கௌம்பி வந்துட்டேன்.

''உங்கப்பாவுக்கு நீ இங்க இருக்கறது தெரியுமா?''

''தெரியாது.''

செல்வி பாலை இறக்கிக் காஃபி கலந்து கொடுத்தாள்.

''இங்க உனக்குத் தெரிஞ்சவங்க யாரு இருக்காங்க செல்வி?''

''நம்ம ராமசுப்பு இல்ல? அதான் பிரேயர் ராமசுப்பு.. அவன் இங்கதான் ஓர் ஆர்க்கெஸ்ட்ரா வச்சிருக்கான். இப்போ அதுலதான் பாடிக்கிட்டிருக்கேன்.''

பின்னர் ஏதேதோ பேசிவிட்டு மனசே இல்லாமல் வெளியே வந்தேன். செல்வி வாசல்வரை வந்தாள்.

என்மீது அவளுக்கு உள்ளது காதலா, நட்பா? என்று குழப்பமாக இருந்தது. இத்தனை வருடங்கள் கழித்து மீண்டும் செல்வியைப் பார்த்த பரவசத்திலேயே போய் விடலாமா என்றுகூட தோன்றியது. மனசு கேட்கவில்லை. சட்டென்று கேட்டுவிட்டேன்.

''உன் எக்ஸ்பீரியன்ஸ்ல மேடைல எவ்ளோ பாட்டு பாடி யிருப்ப... உனக்குப் பிடிச்ச பாட்டு எது செல்வி?''

'' 'மயங்குகிறாள் ஒரு மாது'தான்!'' என்றாள் செல்வி.

ஏனோ எனக்குச் சிலிர்த்தது. ●



ஒரு சமயம் பத்திரிகையாளர்கள் கூட்டம் ஒன்றில் காந்திஜியைப் பார்த்து நிருபர் ஒருவர் ''நீங்கள் சொர்க்கத்துக்குப் போவீர்களா அல்லது நரகத்திற்குப் போவீர்களா?'' என்று கேட்டார்.

அதற்கு காந்திஜி சிரித்துக் கொண்டே ''எனக்குத் தெரியாது. ஆனால், ஒன்று மட்டும் தெரியும். நான் எங்கே போனாலும் பத்திரிகைக்காரர்கள் என் கூட இருப்பார்கள்'' என்றார்.

– கூந்தலூர் ஜெயராமன்




# அலமாரி

**சி**வாஜிராவ் to சிவாஜி - திருவாரூர் குணா, விகடன் பிரசுரம், 757, அண்ணாசாலை, சென்னை - 2, விலை ரூ.85; இதோடு மட்டுமல்லாது ரசிகர்களின் பார்வையில் ரஜினி பற்றி செய்தி.

தமிழ்த் திரையுலகில் உச்ச நட்சத்திரமாகத் திகழும் ரஜினிகாந்தின் வளர்ச்சியை வெளிச்சம் போட்டுக் காட்டும் புத்தகம். தாணு, லதா, எஸ்.பி.முத்துராமன், விஜயகுமார் என்று அவருடன் நெருங்கிப் பழகியவர்கள் பலரின் கட்டுரைகள் சுவையாகப் பரிமாறப் பட்டிருக்கின்றன.

## உள்ளம் தொடும் உன்னதம்!

**கா**வேரி ஒரு துள்ளல் - இரைச்சல் - சேஷ நாராயணா, பாக்கியலட்சுமி பதிப்பகம், 87, 3வது கிராஸ், 4வது பிளாக், பணசங்கரி 3வது ஸ்டேஜ், 3வது பேஸ், பெங்களூர் 560085, விலை ரூ 180, 318 பக்கங்கள்.

கன்னடத்திலிருந்து தமிழுக்கு மொழி பெயர்க்கப்பட்ட நூல். காவிரி யாருக்குச் சொந்தம்... தமிழ் நாட்டுக்கா... கர்நாடகாவுக்கா? உண்மையில் அதிக நீர் பெற உரிமையானவர் யார்? யாரை யார் ஏமாற்றுவது? காவரியின் வரலாறு என்ன? மன்னர்கள் காலத்தின் நடைமுறைகள், இன்று ஒரு மாநில மக்களின் மனநிலைகள்... என காவரியைப் பற்றி 'ஏ டு இஸட்' விவரித்துள்ளார் கன்னட எழுத்தாளர் சேஷநாராயணா. தமிழகம் கர்நாடகத்துக்கு அநியாயம் செய்வதாய் கூறிவிட்டு, கன்னடத்திலிருந்து தைரியமாய் தமிழுக்கு மொழி பெயர்த்திருக்கும் எழுத்தாளரின் துணிச்சலைப் பாராட்டலாம்.







**நா**னோ தொழில்நுட்பம் - ஓர் அறிமுகம் - நெல்லை சு.முத்து, திருவரசு புத்தக நிலையம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17, விலை ரூ 50, 144 பக்கங்கள்

எதிர்காலத்தில் சக்கைப்போடு போடப் போகும் நானோ தொழில்நுட்பம் குறித்த விளக்க புத்தகம். எளிமையான மொழி படிக்கத் தூண்டுகிறது. அறிவியலையும் புனைகதை போல் சுவாரஸ்யமாக வடித்துள்ளார் நூலாசிரியர்.

- மதுமிதா




# பரோபகாரம்!

ஏழையோ-பணக்காரனோ எல்லார் குடும்பத்திலும் கல்யாணம் மாதிரியான சுபகாரியங்கள், சாவு மாதிரியான அசுபகாரியங்கள் வருகின்றன. இவற்றுக்காக எவனும் கடன்படுகிற மாதிரி நாம் விட்டால் அது நமக்குப் பெரியதோஷம். அவரவரும் தன்னாலானதை ஐந்தோ, பத்தோ ஏழைப்பட்ட பந்துக்களின் சுபாசுப காரியங்களுக்கு உதவ வேண்டியது ஒரு பெரிய கடமை. இதை முன்காலங்களிலெல்லாம் சகஜமாகச் செய்து வந்தார்கள். 'பரோபகாரம்' என்று யாரோ மூன்றாம் மனிதர்களுக்குச் செய்வதற்கு முன்னால், நம்முடைய ஏழைப்பட்ட உறவினர்களுக்கு உதவி செய்ய வேண்டும். இரண்டு தலைமுறைக்கு முந்தி இதைச் சொல்ல வேண்டிய அவசியமே இருக்கவில்லை.

அப்போது 'கிழவர் பராமரிப்பு இல்லம்', 'விதவை விடுதி' என்றெல்லாம் வைக்க வேண்டிய அவசியமே இல்லாதிருந்ததற்கு என்ன காரணம்? பந்துக்களே இவர்களைப் பராமரித்து வந்ததுதான். அநேகமாக எல்லா வீடுகளிலும் ஒரு அத்தை, பாட்டி, மூன்று தலைமுறைவிட்டு ஒரு மாமா, தாத்தா என்கிற மாதிரி கிழங்கள் இருக்கும்! தற்காலத்தில் ரொம்பவும் பணக்காரர்களும்கூட வெறும் 'ஷோ'வாக பார்ட்டியும், ஃபீஸ்டும் கொடுக்கிறார்கள்; அல்லது பேப்பரில் போடுகிற மாதிரி டொனேஷன் கொடுக்கிறார்கள்; ஆனால், பந்துத்வத்தோடு தங்கள் குடும்பத்திலேயே வசதி இல்லாதவர்களைப் பாதுகாப்பது என்பது இப்போது அநேகமாகப் போயே போய்விட்டது.

முதலில் ஏழையான பந்துக்களைக் கவனிக்க வேண்டும். சுபாசுப காரியங்களுக்கு நாம் செலவழித்துக் கொண்டு நேரில் போகவேண்டும் என்பதுகூட இல்லை. இந்தச் செலவையும் சேர்த்து அந்த வசதி இல்லாத உறவுக்காரனுக்கு அனுப்பி வைத்தால், அவனுக்கு எத்தனையோ உதவியாக இருக்கும்.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

**இன்றைய காலகட்டத்தில் படிப்பு, மற்றும் வேலைக்காக ஏராளமானோர் வெளிநாடுகளுக்குச் செல்கிறார்கள். மிகுந்த சிரமத்துக்குப் பிறகு பாஸ்போர்ட் வாங்கியவுடன், அவர்களது அடுத்த சவால் விசா வாங்குவதுதான்.**

★ முன்பு போல் அல்லாமல் இப்போது விசா வாங்கும் முறை சற்று எளிமையாக்கப்பட்டிருக்கிறது. வீட்டிலிருந்தே வலைத் தளம் மூலம் விசா வாங்கும் நடைமுறைகளில் பெரும்பகுதியைச் செய்து கொள்ள முடியும்.

★ நமது நாட்டிலிருந்து மிக அதிக அளவில் படிப்புக்காகவும் வேலைக்காகவும் செல்வது அமெரிக்காவுக்குத்தான்.

★ அமெரிக்காவைப் பொறுத்தமட்டில் சுற்றுலா, வர்த்தகம் தொடர்பாகச் சென்று வர, வேலை, படிப்புக்கு என்று பல்வேறு வகைகளில் விசாக்கள் வழங்கப்படுகின்றன. இதுதவிர ஏற்கெனவே அங்கு இருப்பவர்கள் தங்களைச் சார்ந்தவர்களை அழைத்துக் கொள்ளவும் விசாக்கள் வழங்கப்படுகின்றன.

★ விமானப் பயணச் சீட்டை அவசரப்பட்டு வாங்கவேண்டாம். விசா கிடைத்த பிறகு வாங்குவது நல்லது. எனினும் சில நாடுகளை பொறுத்தமட்டில் விண்ணப்பத்தோடு விமான பயணச் சீட்டையும் கேட்கிறார்கள்.

★ எந்த நாடானாலும், விசா வழங்குவதற்கு கட்டணம் (processing fee) உண்டு. அமெரிக்கா என்றால் 5000 ரூபாய்; பிரிட்டன் என்றால் 6000 ரூபாய்; ஆஸ்திரேலியா என்றால் 3000 ரூபாய்.

★ அமெரிக்க விசா வேண்டுமென்றால், ஹெச்.டி.எஃப்.சி. (HDFC) வங்கியில் 5000 ரூபாய் அமெரிக்க தூதரகத்தின் பெயரில் கட்டிவிட்டு, நாற்பத்தெட்டு மணி நேரத்துக்குப்பின் வலைத்தளத்துக்குள் புகுந்து (www.vfs.usa.co.in) விண்ணப்பத்தைப் பெற வேண்டும். பின்னர் விண்ணப்பத்தைப் பூர்த்தி செய்து, வலைத்தளம் மூலமாகவே அந்தத் தூதரகத்துக்கு அனுப்ப வேண்டும். உங்கள் விண்ணப்பத்தைப் பார்த்து, ஒரு குறிப்பிட்ட நேரத்தில் உங்களை நேராக வரச் சொல்லி பதில் அனுப்புவார்கள் மின் அஞ்சலில்.

★ விசா அதிகாரியைச் சந்திக்கும் போது, உங்கள் ஒரிஜினல் பாஸ்போர்ட், அதன் நகல்கள், கல்யாணமானவர் என்றால் பதிவுச் சான்றிதழ், இருப்பிடச் சான்றிதழ், வெளிநாட்டிலிருந்து வந்த வேலைக்கான உத்தரவு, அல்லது படிப்பு என்றால் பல்கலைக்கழகம் அல்லது கல்லூரியின் அனுமதிக் கடிதம் போன்றவற்றுடன் பாஸ்போர்ட் சைஸ் புகைப்படங்களையும் எடுத்



துச் செல்ல வேண்டும்.

★ விசா அதிகாரி உங்களைப் பல்வேறு விதமான கேள்விகளுடன் மடக்குவார். எந்தக் காரணத்துக்காகச் செல்கிறீர்களோ, அந்தப் பணி முடிந்தவுடன் நீங்கள் திரும்பி வந்து விடுவீர்களா? என்று உறுதி செய்து கொள்வதே விசாரணையின் நோக்கமாக இருக்கும்.

# வலைத்தளம் மூலம் விசா!

படிப்புக்காக அமெரிக்கா சென்று, பின்னர் அங்கேயே வேலை கிடைத்தால் கூட, நீங்கள் திரும்பவும் தாயகத்துக்கு வந்து வேலைக்காக மறுபடியும் விசா வாங்கிக் கொண்டுதான் செல்ல வேண்டும்.

★ சுற்றுலாப் பயணிகள் என்றால் மூன்று மாத கால விசா கொடுப்பார்கள். அந்தக் காலகட்டத்துக்குள் சுற்றுப்பயணம் செய்து மீண்டும் தாயகம் வந்துவிட வேண்டும்.

★ அமெரிக்காவில் சில வருடங்கள் தங்கிய பிறகு Alien Registration Card என்ற கிரீன் கார்டைப் பெற்று நிரந்தரமாக வசிக்க முடியும்.

★ கல்யாணப் பதிவுச் சான்றிதழ் ஒரிஜினல் கேட்பதற்குக் காரணம், வெளிநாட்டவர்கள் சிலர், பணத்தைப் பெற்றுக் கொண்டு, இங்குள்ளவர்களைக் கல்யாணம் செய்து கொண்டதாகச் சொல்லி, அவர்களை வெளிநாட்டுக்கு அழைத்துச் சென்றுவிடுவதுதான். அப்படிச் செல்லும்போது அவர்கள் அங்கேயே நிரந்தரமாகவும் தங்கிவிட முடியும். இதைத் தடுப்பதற்குக்தான் கல்யாணப் பதிவுச் சான்றிதழைக் கேட்கிறார்கள்.

★ பிரிட்டன் மற்றும் ஆஸ்திரேலியா நாட்டுக்கான விசா நடைமுறைகூட, மேலே சொன்ன வலைத்தளம் மூலமாகச் செய்துகொள்ள முடியும். மற்ற நாடுகளைப் பொறுத்தமட்டில் நேரடியாகத் தூதரகங்களை அணுகலாம்.

★ வளைகுடா நாடுகளுக்கு விசா வாங்க வேண்டுமென்றால் அரபு அரசோ, அல்லது அங்குள்ள நிறுவனங்களோ அல்லது தனிப்பட்ட அரேபியரோ உங்களை ஸ்பான்ஸர் செய்தால்தான் விசா கிடைக்கும்.

★ கனடா, பிரான்ஸ், அமெரிக்கா போன்ற சில நாடுகளில் மனித உரிமைகளை அடிப்படையாகக் கொண்டு (நீங்கள் அகதிகளாக இருந்தால்) எந்தவித விசாவும் இன்றி அங்கே போய் ஜம்மென்று செட்டிலாக முடியும். யாழ்ப்பாண தமிழர்கள் லட்சக்கணக்கில் இப்படிச் சென்று அங்கே வாழ்கிறார்கள்.

★ விசா வழங்க, அமெரிக்கா, பிரிட்டன் உட்பட, இருபத்தொன்பது வெளிநாட்டு தூதரகங்கள் சென்னையில் இருக்கின்றன. பல சிறிய நாடுகளின் தூதரகங்கள் டெல்லியில் மட்டும்தான் இருக்கின்றன.

– கௌசி

சரித்திரப் படங்கள் குறித்தும், அமரர் கல்கியின் படைப்புகள் குறித்தும் ஒளிப்பதிவாளர் கே.வி.ஆனந்த், இந்த வாரமும் படம் பிடித்துக் காட்டுகிறார்.

**சினிமாஸ்கோப்**

பத்து வருடங்களுக்கு முன்புவரை 'பொன்னியின் செல்வன்', 'பார்த்திபன் கனவு' போன்ற பிரமாண்டமான சரித்திர நாவல்களைப் படமாக்குவது என்பது சவாலான விஷயமாக இருந்திருக்கலாம். காரணம், அரண்மனை, ஏராளமான போர் வீரர்கள், போர்க் காட்சிகள் போன்றவற்றை எடுப்பதற்கு மிகவும் செலவு பிடிக்கும் ஆனால், 'கம்ப்யூட்டர் கிராபிக்ஸ்' என்கிற வரம் இப்போது நமக்குக் கிடைத்துள்ளது.

கிராபிக்ஸ் இப்போது எல்லாவற்றையும் எளிமையாகவுமாக்கிவிட்டது. கிராஃபிக்ஸ் துணையோடு ஒரு அரண்மனை செட் போடுவதற்கு மிகக் குறைவான செலவு தான் பிடிக்கும். முன்னூறு பேரைக் கொண்டு மூவாயிரம் பேராகக் காட்டிவிடலாம். ஹாலிவுட்டில் எல்லாம் இந்த யுக்தியைப் பயன்படுத்திதான், தங்களது சரித்திர படங்களை உலகம் முழுவதும் பார்க்க வைக்கிறார்கள்.

பல காட்சிகளை, ஒரு ஸ்டுடியோவுக்குள் நீலத் துணியைப் பின்னணியில் மாட்டிவிட்டு, ஷூட் செய்து விடுகிறார்கள் பிறகு கிராபிக்ஸ் மூலம் அந்தக் காட்சி மலையடிவாரத்தில், கானகத்தில், கடலின் நடுவில் நடப்பதைப் போல் பின்னணியைப் புகுத்திக் காட்டுகிறார்கள். ஏமாற்று வேலைதான். ஆனால், 'மேஜிக் ஷோ' போல, ரசிக்கத்தக்க ஏமாற்று வேலை. ரசனை ஏமாளியாய் இருப்பதில் தப்பில்லை!

ஹாலிவுட்டின் இந்த யுக்தியை சீனர்களும் மிக அழகாகப் பயன்படுத்துகிறார்கள். 'க்ரோசிங் டைகர் ஹிட்டன் டிராகன்' என்றொரு படம். இதில் அவர்களின் முந்தைய வாழ்க்கை முறை, வீரம், காதல், பாசம் எல்லாம் காட்டப்பட்டுள்ளது. அவற்றைக் காட்டிய விதத்தைக் கவனிக்க வேண்டும்.

தங்கள் நாட்டு மக்கள் மட்டுமே பார்க்



# ரசனை

கும் படமாக இல்லாமல், நவீன தொழில் நுட்பங்களைப் புகுத்திப் பிரமாண்டமாகத் தயாரித்து, உலகம் முழுவதும் வெளியிட்டார்கள். வசூலிலும் சாதனை படைத்தார்கள். அதுபோல் நமது சரித்திரங்களும் உலக மக்களின் பார்வைக்குச் செல்ல வேண்டும். மீண்டும் சரித்திரப் படங்களை எடுப்பது பெரிய விஷயமல்ல, அப்படி எடுக்கப்படும் படங்கள் நாம் மட்டுமே பார்ப்பதாக இல்லாமல் உலக மக்கள் ரசிக்கும் வகையில் இருக்க வேண்டும். ஒரு சராசரி ரசிகன் எதிர்பார்க்கும் வீரம், காதல் எல்லாம் நமது சரித்திரத்தில் நிறையவே உள்ளன. ஆகவே, அதனைக் கொடுக்கும் விதத்தில்தான் நமது வெற்றி இருக்கிறது.

பார்த்திபனின் கனவு 'சோழ சாம்ராஜ்யத்தின் புகழ் உலகம் முழுவதும் பரவ வேண்டும்; இமயம் வரை புலிக்கொடி பறக்க வேண்டும்' என்பது. அதுபோல நமது சரித்திரம் உலகம் முழுவதும் உலா வர வேண்டும். எளிமையாகி வரும் சினிமா தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி இதனைக் கட்டாயம் சாதிக்க முடியும்.

**ஹி**ந்தியில் தற்போது அக்பரின் சரித்திரம் படமாகத் தயாராகிக் கொண்டிருக்கிறது. ஷாருக்கான் நடித்த 'அசோகா' வந்து சில வருடங்களே ஆகின்றன. பிருத்விராஜாவின் சரித்திரம் உருவாகி வருகிறது. எல்லாமே பிரமாண்டமாய் எடுக்கப்படும் படங்கள். ஆனால், தமிழில் தான் எந்தவித முயற்சியும் இல்லை.

அமரர் கல்கி போன்ற சரித்திர நாவலாசிரியர்கள் நமக்கு அதிகம் தேடி அலையும் சிரமம் இன்றி சரித்திர ஆவணங்களைப் பதிவுசெய்து வைத்திருக்கிறார்கள். அப்படி இருந்தும் தயக்கத்திலேயே இருக்கிறோம். ஒரு சாதாரண மசாலா கதைக்குக் கோடிக் கணக்கில் செலவழிக்கிறோம். டூயட் காட்சிக்கு நாடுவிட்டு நாடு செல்கிறோம். கதாநாயகனுக்குக் கோடியில் சம்பளம் தருகிறோம். இவற்றை எல்லாம் நல்ல சரித்திரப் படங்களுக்குச் செலவிடலாம். ரசனையுடன் எடுத்தால் வெற்றி பெற்று லாபமும் பார்க்க முடியும்.

இதெல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். நமது தமிழ்ச் சரித்திரத்தை நாமே எந்த அளவுக்குத் தெரிந்து வைத்திருக்கிறோம். இதுகுறித்து பெரிய வருத்தமும் எனக்கு உண்டு! நமது அரசின் மீதே வருத்தம். என்ன அது?

(அடுத்த வாரம்)

**கே.வி.ஆனந்த்**



# இரண்டாம் பாகம்

## 1. சிவனடியார்



பொழுது புலர இன்னும் அரை ஜாமப்பொழுது இருக்கும். கீழ்வானத்தில் காலைப் பிறையும் விடிவெள்ளியும் அருகருகே ஒளிர்ந்துகொண்டிருந்தன. உச்சிவானத்தில் வைரங்களை வாரி இறைத்ததுபோல் நட்சத்திரங்கள் பிரகாசித்தன. வடக்கே ஸப்த ரிஷி மண்டலம் அலங்காரக் கோலம் போட்டதுபோல் காட்சியளித்தது. தெற்கு மூலையில் சுவாதி நட்சத்திரம் விசேஷ சோபையுடன் தனி அரசு புரிந்தது.

அந்த மனோகரமான அதிகாலை நேரத்தில், காவேரி பிரவாகத்தின் 'ஹோ' என்ற சப்தத்தைத் தவிர வேறு சப்தம் ஒன்றுமேயில்லை. திடீரென்று அத்தகைய அமைதியைக் கலைத்துக்கொண்டு 'டக் டக் டக்' என்ற குதிரையின் காலடிச் சப்தம் கேட்கலாயிற்று. ஆமாம், இதோ ஒரு கம்பீரமான உயர்ந்த ஜாதிக் குதிரை காவேரி நதிக் கரைச் சாலை வழியாகக் கிழக்கேயிருந்து மேற்கு நோக்கி வருகிறது. அது விரைந்து ஓடி வரவில்லை; சாதாரண நடையில்தான் வருகிறது. அந்தக் குதிரை மீது ஆஜானுபாகுவான ஒரு வீரன் அமர்ந்திருக்கிறான். போதிய வெளிச்சமில்லாமையால், அவன் யார், எப்படிப்பட்டவன் என்று அறிந்துகொள்ளும்படி அங்க அடையாளங்கள் ஒன்றும் தெரியவில்லை. நெடுந்தூரம் விரைந்து ஓடிவந்த அக்குதிரையை இனிமேலும் விரட்ட வேண்டாமென்று அவ்வீரன் அதை மெதுவாக நடத்தி வந்ததாகத் தோன்றியது. அவன், தான் சேர வேண்டிய இடத்துக்குக் கிட்டத்தட்ட வந்துவிட்டதாகவும் காணப்பட்டது.

அவனுக்கு வலதுகைப் புறத்தில் காவேரி நதியின் பிரவாகம், இடது புறத்திலோ அடர்ந்த மரங்களும் புதர்களும் நிறைந்த காடாகத் தோன்றியது. வீரன், இடதுபுறத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டு வந்தான். ஓரிடத்துக்கு வந்ததும் குதிரையை இடதுபுறமாகத் திருப்பினான். குதிரையும் அந்த இடத்தில் திரும்பிப் பழக்கப்பட்டது போல் அநாயாசமாகச் செடிகொடிகள் அடர்ந்த காட்டுக்குள் புகுந்து சென்றது. கவனித்துப் பார்த்தால் அந்த இடத்தில் ஒரு குறுகிய ஒற்றையடிப் பாதை போவது தெரியவரும்.

அந்தப் பாதை வழியாகக் குதிரை மிகவும் சிரமப்பட்டுக் கொண்டுதான் சென்றது. இரண்டு பக்கங்களிலும் நெருங்கி வளர்ந்திருந்த புதர்களும், கொடிகளும், மேலே கவிந்திருந்த மரக் கிளைகளும் குதிரை எளிதில் போக முடியாதபடி செய்தன. குதிரை மீதிருந்த வீரனோ அடிக்கடி குனிந்தும், வளைந்து கொடுத்தும், சில சமயம் குதிரையின் முதுகோடுமுதுகாய்ப் படுத்துக்கொண்டும், மரக்கிளைகளினால் கீழே தள்ளப்படாமல் தப்பிக்க வேண்டியிருந்தது. இத்தகைய பாதை வழியாகக் கொஞ்ச தூரம் சென்ற பிறகு திடீரென்று சிறிது இடைவெளியும் ஒரு சிறு கோயிலும் தென்பட்டன. கோயிலுக்கெதிரே பிரம்மாண்டமான யானை, குதிரை முதலிய வாகனங்கள் நின்றதைப் பார்த்

# பார்த்திபன்

## வெண்ணாற்றங்கரையில் ரணகளத்தில்

# பார்த்திபனுக்கு வரமளித்த சிவனடியார் இவர்தான்!

தால், அது ஐயனார் கோயிலாயிருக்க வேண்டுமென்று ஊகிக்கலாம். வேண்டுதலுக்காக பக்தர்கள் செய்து வைத்த அந்த மண்யானை குதிரைகளில் சில வெகு பழமையானவை; சில புத்தம் புதியவை. அவற்றின் மீது பூசிய வர்ணம் இன்னும் புதுமை அழியாமலிருந்தது. பலிபீடம், துவஜஸ்தம்பம் முதலியவையும் அங்கு காணப்பட்டன.

கீழ்வானம் வெளுத்துப் பலபலவென்று பொழுதுவிடியும் சமயத்தில் மேற்சொன்ன வீரன் குதிரையின் மீது அங்கே வந்து சேர்ந்தான். வீரன் குதிரையிலிருந்து கீழே குதித்து அவசரஅவசரமாகச் சில அதிசயமான காரியங்களைச் செய்யத் தொடங்கினான். மண் யானைகளுக்கும் மண் குதிரைகளுக்கும் மத்தியில் தான் ஏறி வந்த குதிரையை நிறுத்தினான். குதிரை மீது கட்டியிருந்த ஒரு மூட்டையை எடுத்து அவிழ்த்தான். அதற்குள் இருந்த புலித் தோல், ருத்திராட்சம், பொய் ஜடாமூடி முதலியவைகளை எடுத்துத் தரித்துக்கொள்ளத் தொடங்கினான். சற்றுநேரத்தில் பழைய போர் வீரன் உருவம் அடியோடு மாறி, திவ்யதேஜஸுடன் கூடிய சிவயோகியாகத் தோற்றம் கொண்டான்.

ஆம்; வெண்ணாற்றங்கரையில் ரண களத்தில் பார்த்திபனுக்கு வரமளித்த சிவ னடியார்தான் இவர்.

தம்முடைய பழைய உடைகளையும், ஆபரணங்களையும், ஆயுதங்களையும், மூட்டையாகக் கட்டி, உடைந்து விழுந்திருந்த மண் யானை ஒன்றின் பின்னால் வைத்தார் அந்தச் சிவயோகி. குதிரையை ஒரு தடவை அன்புடன் தடவிக் கொடுத்தார். குதிரையும் அந்தச் சமிக்ஞையைத் தெரிந்துகொண்டது போல் மெதுவான குரலில் கனைத்தது.

பிறகு அங்கிருந்து அச் சிவனடியார் கிளம்பி ஒற்றையடிப் பாதை வழியாகத் திரும்பிச் சென்று காவேரிக் கரையை அடைந்தார். மறுபடியும் மேற்கு நோக்கி நடக்க ஆரம்பித்தார்.

ஒரு நாழிகை வழி நடந்த பிறகு சூரியன் உதயமாகும் தருணத்தில், இந்தச் சரித்திரத்தின் ஆரம்ப அத்தியாயத்தில் நாம் பார்த்திருக்கும் தோணித்துறைக்கு வந்து சேர்ந்தார். அங்கே படகோட்டி பொன்னனுடைய குடிசைக்கு அருகில் வந்து நின்று, ''பொன்னா'' என்று கூப்பிட்டார்.

உள்ளிருந்து, ''சாமியார் வந்திருக்கிறார் வள்ளி!'' என்று குரல் கேட்டது. அடுத்த வினாடி பொன்னன் குடிசைக்கு வெளியில் வந்து சிவனடியார் காலில் விழுந்தான். அவன் பின்னோடு வள்ளியும் வந்து வணங்கினாள். பிறகு மூவரும் உள்ளே போனார்கள். வள்ளி பயபக்தியுடன் எடுத்துப் போட்ட மணையில், சிவனடியார் அமர்ந்தார். ''பொன்னா! மகாராணியும் இளவரசரும் வஸந்த மாளிகையில்தானே இருக்கிறார்கள்?'' என்று அவர் கேட்டார்.

''ஆம் சுவாமி! இன்னும் கொஞ்ச நாளில் நமது இளவரசரையும் 'மகா ராஜா' என்று எல்லோரும் அழைப்பார்களல்லவா?''

''ஆமாம்; எல்லாம் சரியாக நடந்தால், நீ உடனே போய் அவர்களை அழைத்துக் கொண்டு வா!'' என்றார் சிவனடியார்.

''இதோ போகிறேன். வள்ளி, சுவாமி

# கனவு

அமரர் கல்கி

யாரைக் கவனித்துக் கொள்!'' என்று சொல்லிவிட்டுப் பொன்னன் வெளியேறினான். சிறிது நேரத்துக்கெல்லாம் படகு தண்ணீரில் போகும் சலசலப்புச் சப்தம் கேட்கத் தொடங்கியது.

## 2. வம்புக்கார வள்ளி

**பொ**ன்னன் போனதும் வள்ளி சிவனடியாருக்கு மிகுந்த சிரத்தையுடன் பணிவிடைகள் செய்யத் தொடங்கினாள். அவருடைய காலை அனுஷ்டானங்கள் முடிவடைந்ததும் அடுப்பில் தட்டிக் கொண்டிருந்த கம்பு அடையைச் சுடச்சுடக் கொண்டு வந்து சிவனடியார் முன்பு வைத்தாள். அவர் மிக்க ருசியுடன் அதைச் சாப்பிட்டுக் கொண்டே வள்ளியுடன் பேச்சுக் கொடுத்தார்.

''வள்ளி! ராணி எப்படி இருக்கிறாள் தெரியுமா?'' என்று கேட்டார் சிவனடியார்.

''இளவரசர் பக்கத்தில் இருக்கும் போதெல்லாம் தேவி தைரியமாகத்தான் இருக்கிறார். அவர் அப்பால் போனால் கண்ணீர்விடத் தொடங்கி விடுகிறார்'' என்றாள் வள்ளி.

பிறகு, ''சுவாமி! இதெல்லாம் எப்படித்தான் முடியும்? இளவரசர் நிஜமாக மகாராஜா ஆகிவிடுவாரா? அவருக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால், ராணி பொறுக்க மாட்டார்; உயிரையே விட்டுவிடுவார்'' என்றாள் வள்ளி.

''எனக்கென்ன தெரியும் அம்மா! கடவுளுடைய சித்தம் எப்படியோ அப்படித்தான் நடக்கும். உனக்குத் தெரிந்தவரை ஜனங்கள் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்?''

''ஜனங்கள் எல்லோரும் இளவரசர் பக்கந்தான் இருக்கிறார்கள். பல்லவ அதிகாரம் ஒழிய வேண்மென்றுதான் ஆசைப்படுகிறார்கள். பார்த்திப மகாராஜாவின் வீரமரணத்தைப் பற்றித் தெரியாத குஞ்சு குழந்தைகூடக் கிடையாது. சுவாமி அந்தச் செய்தியைத் தாங்கள்தானே ஆறு வருஷத்துக்கு முன்னால் எங்களுக்கு வந்து



சொன்னீர்கள்? அதை நானும் ஓடக்காரரும் இதுவரையில் லட்சம் ஜனங்களுக்காவது சொல்லியிருப்போம்'' என்றாள்.

''நானும் இன்னும் எத்தனையோ பேரிடம் சொல்லியிருக்கிறேன். இருக்கட்டும்; மாரப்ப பூபதி எப்படியிருக்கிறான்? இப்போது உன் பாட்டனிடம் ஜோஸியம் கேட்க அவன் வருவதுண்டா?'' என்று கேட்டார் சிவனடியார்.

''ஆகா! அடிக்கடி வந்துகொண்டுதானிருக்கிறான்'' என்றாள் வள்ளி. உடனே, எதையோ நினைத்துக்கொண்டவள் போல் இடிஇடி என்று சிரித்தாள்.

சிவனடியார், ''என்னத்தைக் கண்டு, அம்மா, இப்படிச் சிரிக்கிறாய்? என்னுடைய மூஞ்சியைப் பார்த்தா?'' என்றார்.

''இல்லை; சுவாமி! இல்லை. மாரப்ப பூபதியின் ஆசை இன்னதென்று உங்களுக்குத் தெரியுமா? காஞ்சி சக்கரவர்த்தியின் மகளை இவன் கட்டிக்கொள்ளப் போகிறானாம்! கலியாணத்துக்கு முகூர்த்தம் வைக்க வேண்டியதுதான் பாக்கி'' என்றாள்.

சிவனடியாரின் முகத்தில் ஒரு விநாடி நேரம் இருண்ட மேகம் படர்ந்ததுபோல் தோன்றியது. உடனே அவர் புன்னகையை வருவித்துக்கொண்டு, ''ஆமாம்; உனக்கென்ன அதில் அவ்வளவு சிரிப்பு?'' என்று கேட்டார்.

''சக்கரவர்த்தியின் மகள் எங்கே? இந்தப் பேதை மாரப்பன் எங்கே? உலகத்தில் அப்படி ஆண் பிள்ளைகளே அற்றுப்போய் விடவில்லையே, நரசிம்ம பல்லவரின் மகளை இந்தக் கோழை பயங்காளிக்குக் கொடுப்பதற்கு?'' என்றாள் வள்ளி.

''ஆனால், உன் பாட்டன்தானே மாரப்பனை இப்படிப் பைத்தியமாய் அடித்தது

**மேற்குத் திசையில் தூரத்தில் குதிரையின் குளம்படிச் சப்தம் கேட்கவே, சிவனடியார் விரைவாக விடைபெற்றுக் கொண்டார்!**

வள்ளி, இல்லாத பொல்லாத பொய் ஜோசியங்களையெல்லாம் சொல்லி'' என்றார் சிவனடியார்.

''அப்படிச் சொல்லியிராவிட்டால், அந்தப் பாவி என் பிராணனை வாங்கியிருப்பான், சுவாமி! - போகட்டும்; சக்கரவர்த்தியின் குமாரி ரொம்ப அழகாமே, நிஜந்தானா! நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?'' என்று வள்ளி ஆவலுடன் கேட்டாள்.

''சிவனடியார் புன்னகையுடன், பார்த்திருக்கிறேன், அம்மா, பார்த்திருக்கிறேன். ஆனால், அழகைப் பற்றி எனக்கு என்ன தெரியும்? நான் துறவி!'' என்றார்.

''எங்கள் ராணியைவிட அழகாயிருப்பாளா? சொல்லுங்கள்.''

''உங்கள் ராணி அவ்வளவு அழகா என்ன?''

''எங்கள் ராணியா? இல்லை, இல்லை! எங்கள் ராணி அழகேயில்லை, சுத்த அவலட்சணம், உங்கள் சக்கரவர்த்தி மகள்தான் ரதி...''

''என்ன வள்ளி இப்படிக் கோபித்துக் கொள்கிறாய்?''

''பின்னே என்ன? எங்கள் ராணியை நீங்கள் எத்தனையோ தடவை பார்த்திருந்தும் இப்படிக் கேட்கிறீர்களே? அருள்மொழிதேவியைப் போல் அழகானவர் இந்த ஈரேழு பதினாலு உலகிலும் கிடையாது...''

''நான்தான் சொன்னேனே, அம்மா! ஆண்டியாகிய எனக்கு அழகு என்ன தெரியும். அவலட்சணந்தான் என்ன தெரியும்?''

''உங்களுக்குத் தெரியாது என்றுதான் தெரிகிறதே! ஆனால், காஞ்சி சக்கரவர்த்தியை எப்போதாவது பார்த்தால் கேளுங்கள்; அவர் சொல்லுவார். அருள்மொழி தேவிக்கும் பார்த்திப மகாராஜாவுக்கும் கலியாணம் ஆவதற்கு முன்னால் நடந்த செய்தி உங்களுக்குத் தெரியுமா? அருள்மொழிதேவியின் அழகைப் பற்றி நரசிம்மவர்மர் கேள்விப்பட்டு, 'அருள்மொழியைக் கலியாணம் செய்துகொண்டால் செய்து கொள்வேன்; இல்லாவிட்டால் தலையை மொட்டையடித்துக் கொண்டு புத்த சந்நியாசியாகப் போய் விடுவேன்' என்று பிடிவாதம் பிடித்தாராம். ஆனால், அருள்மொழிதேவிக்கு அதற்கு முன்பே பார்த்திப மகாராஜாவுடன் கலியாணம் நிச்சயமாகி விட்டது. இன்னொரு புருஷனை மனதினால்கூட நினைக்க மாட்டேன் என்று கண்டிப்பாய்ச் சொல்லி, கடைசியில் பார்த்திப மகாராஜாவையே கலியாணம் செய்துகொண்டார்.

சிவனடியார் முகத்தில் மந்தகாசம் தவழ, ''ஆமாம், அம்மா! நரசிம்மவர்மர் அப்புறம் என்ன செய்தார்? தலையை மொட்டை அடித்துக்கொண்டு பௌத்த பிக்ஷு ஆகிவிட்டாரா?'' என்று கேட்டார்.

''ஆண் பிள்ளைகள் சமாசாரம் கேட்க வேண்டுமா, சுவாமி! அதிலும் ராஜாக்கள், சக்கரவர்த்திகள் என்றால் மனது ஒரே நிலையில் நிற்குமா? அப்புறம் அவர் பாண்டிய ராஜகுமாரியைக் கலியாணம் செய்து கொண்டார். இன்னும் எத்தனை பேரோ, யார் கண்டது..? நான் மட்டும் ராஜகுமாரியாய்ப் பிறந்திருந்திருந்தால் எந்த ராஜாவையும் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன். அரண்மனையில் பத்து சக்களத்திகளோடு இருப்பதைக் காட்டிலும், கூரைக் குடிசையில் ஒருத்தியாயிருப்பது மேலில்லையா?''

சிவனடியார் கலகலவென்று நகைத்தார். ''நீ சொல்வது நிஜந்தான், அம்மா! ஆனால், நரசிம்மவர்மன் நீ நினைப்பது போல் அவ்வளவு பொல்லாதவனல்ல...'' என்றார்.

''இருக்கட்டும் சுவாமி! அவர் நல்லவராகவே இருக்கட்டும். அவர்தான் உங்களுக்கு ரொம்ப வேண்டியவர் போலிருக்கிறதே! ஒரு காரியம் செய்யுங்களேன்? சக்கரவர்த்தியின் மகளை எங்கள் இளவரசருக்குக் கலியாணம் செய்து வைத்து விடுங்களேன்! சண்டை... சச்சரவு எல்லாம் தீர்ந்து சமாதானம் ஆகி விடட்டுமே...''

''நல்ல யோசனைதான், வள்ளி! ஆனால், என்னால் நடக்கக்கூடிய காரியம் அல்ல. நீ வேண்டுமானால் சக்கரவர்த்தியைப் பார்த்துச் சொல்லேன்...''

''நான் சக்கரவர்த்தியை எப்போதாவது பார்த்தால் நிச்சயமாய்ச் சொல்லத்தான் போகிறேன். எனக்கு என்ன பயம்?'' என்றாள்.

அச்சமயத்தில், படகு கரைக்கு வந்து சேர்ந்த சப்தம் கேட்டது.

வள்ளி, ''படகு வந்து விட்டது'' என்று சொல்லிக்கொண்டு குடிசைக்கு வெளியே வந்தாள்.



## 3. சதியாலோசனை

**ச**ற்று நேரத்துக்கெல்லாம் அருள்மொழிதேவியும் இளவரசர் விக்கிரமனும் குடிசைக்குள் வந்து ''சுவாமி'' என்று சொல்லி சிவனடியாரின் பாதத்தில் வணங்கினார்கள். சிவனடியார் விக்கிரமனைத் தூக்கி எடுத்து அணைத்துக்கொண்டு ஆசீர்வதித்தார்.

ஆறு வருஷத்துக்கு முன் அறியாப் பாலகனாயிருந்த விக்கிரமன் இப்போது இளங்காளைப் பருவத்தை அடைந்து ஆஜானுபாகுவாக விளங்கினான். அவன் முகத்தில் வீரக்களை திகழ்ந்தது. உள்ளத்தில் பொங்கிய ஆர்வத்தின் வேகம் கண்களில் அலையெறிந்தது. படபடவென்று பேசத் தொடங்கினான்: ''சுவாமி! நேற்றிரவு கனவில் என் தந்தை வந்தார். என்னை அழைத்துக் கொண்டு சிராப்பள்ளி மலைக்குப் போனார். அங்கே உச்சியில் பறந்துகொண்டிருந்த பல்லவர்களின் சிங்கக் கொடியைக் காட்டினார்... சுவாமி! இனிமேல் என்னால் பொறுத்திருக்க முடியாது. நீங்கள் என்னை ஆசீர்வதிக்க வேண்டும்'' என்றான்.

''என்னுடைய ஆசீர்வாதம் உனக்கு எப்போதும் இருக்கிறது. விக்கிரமா! சரியான காலம் வரும் வரையில் காத்திருக்கும்படிதானே சொன்னேன்? இப்போது காலம் வந்துவிட்டது. நீ என்ன செய்ய உத்தேசித்திருக்கிறாய், சொல்லு. வெறும் பதட்டத்தினால் மட்டும் காரியம் ஒன்றும் ஆகிவிடாது. தீர யோசித்து ஒரு காரியத்தில் இறங்க வேண்டும். உன் தந்தை உனக்குக் கொடுத்துவிட்டுப் போன குறள் நூலில் தெய்வப்புலவர் என்ன சொல்லியிருக்கிறார்?

**'எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின்**
**எண்ணுவம் என்ப(து) இழுக்கு'**

- இதை நீ எப்போதும் ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும்...''

''ஆம், சுவாமி! எண்ணித்தான் துணிந்திருக்கிறேன். வரப் போகும் புரட்டாசிப் பௌர்ணமியன்று சிராப்பள்ளி மலை மீது பறக்கும் பல்லவர் கொடியை எடுத்தெறிந்துவிட்டு அங்கே புலிக்கொடியைப் பறக்கவிடப் போகிறேன். யார் என்ன சொன்னபோதிலும் இந்தத் தீர்மானத்தை நான் மாற்றிக் கொள்ளப் போவதில்லை.''

''மிக்க சந்தோஷம், விக்கிரமா! உன் தீர்மானத்தை மாற்றிக் கொள்ளும்படி நானும் சொல்லப் போவதில்லை. இந்த நாள் எப்போது வரப்போகிறதென்றுதான் நான் காத்துக் கொண்டிருந்தேன். ஆனால், உன் தீர்மானத்தைக் காரியத்தில் நிறைவேற்ற என்ன ஏற்பாடு செய்திருக்கிறாய்? அதைத் தெரிந்துகொள்ள மட்டும் விரும்

புகிறேன். புலிக் கொடியைப் பறக்க விட்டு விட்டால் போதுமா? அதைக் காத்து நிற்கப் படைகள் வேண்டாமா? பல்லவ தள பதி அச்சுதவர்மன் சும்மா பார்த்துக்கொண்டிருப்பானா...?''

''சுவாமி! அந்தக் கவலை, தங்களுக்கு வேண்டவே வேண்டாம். சோழ நாட்டு மக்கள் எல்லோரும் சித்தமாயிருக்கிறார்கள். பொன்னனைக் கேளுங்கள், சொல்லுவான். புரட்டாசிப் பௌர்ணமியில் வீரர்கள் பலர் உறையூரில் வந்து கூடுவார்கள். புலிக்கொடி உயர்ந்ததும் அவர்கள் என்னுடைய படையில் பகிரங்கமாய்ச் சேர்ந்து விடுவார்கள். உறையூரிலுள்ள பல்லவ சைன்யத்தைச் சின்னாபின்னம் செய்து அச்சுதவர்மனையும் சிறைப்படுத்தி விடுவோம்....!''

''இந்த அபாயகரமான முயற்சியில் உனக்கு யார் ஒத்தாசை செய்கிறார்கள்? யார் உனக்காகப் படை திரட்டுகிறார்கள்! நீயோ வசந்த மாளிகையை விட்டு வெளியே போனது கிடையாதே...''

''என் சித்தப்பா மாரப்ப பூபதிதான் எல்லா ஏற்பாடுகளும் செய்கிறார். அவர் இரகசியமாக ஒரு பெரிய படை திரட்டி வைத்திருக்கிறார்...''

மாரப்ப பூபதி என்றதுமே சிவனடியாரின் முகம் கறுத்தது. அவர் விக்கிரமனை நடுவில் நிறுத்தி, ''யார்? மாரப்ப பூபதியா இதெல்லாம் செய்கிறான்; அவனிடம் உன் உத்தேசத்தை எப்போது சொன்னாய்?'' என்று கேட்டார்.

''சித்தப்பா முன்மாதிரி இல்லை! நீங்கள் கவலைப்பட வேண்டாம். அடியோடு புது மனிதர் ஆகிவிட்டார். என் தகப்பனார் விஷயத்தில் நடந்துகொண்டதற்காக மிகவும் பச்சாதாபப்படுகிறார். அதற்குப் பரிகாரமாக இப்போது சோழ நாட்டின் விடுதலைக்கு உயிரையும் கொடுக்கச் சித்தமாயிருக்கிறார்'' என்றார் விக்கிரமன்.

சிவனடியார், அருள்மொழியைப் பார்த்து, ''தேவி! இது நிஜந்தானா?'' என்று கேட்டார்.

''ஆம், சுவாமி! மாரப்ப பூபதி மனந் திருந்தியவராகத்தான் காணப்படுகிறார்'' என்றாள் அருள்மொழி.

''மெத்த சந்தோஷம், விக்கிரமா! உன்னுடைய முயற்சி நிறைவேறட்டும். தேவசேனாதிபதியான கார்த்திகேயர் உன்னைக் காத்து நிற்கட்டும். உன் தோளுக்கும் வாளுக்கும் பராசக்தி பலம் அளிக்கட்டும். அவசியமான சமயத்தில் மறுபடியும் வருவேன். இப்போது போய் வருகிறேன்'' என்று எழுந்தார் சிவனடியார்.

''சுவாமி! என் சித்தப்பா இப்போது வருவதாகச் சொல்லியிருக்கிறாரே; அவர் தங்களைப் பார்க்க மிகவும் ஆவலாயிருக்கிறார். தாங்கள் கொஞ்சம் இருந்து போக வேண்டும்'' என்றான் விக்கிரமன்.

''இல்லை, விக்கிரமா! எனக்கு இருக்க நேரமில்லை. எது எப்படியானாலும் நீ உன் உறுதியைக் கைவிடாதே. உன் தந்தை வாக்கை மறந்து விடாதே'' என்றார்.

அருள்மொழிதேவி அப்போது பொன்னனைப் பார்த்து, ''பொன்னா! இளவரசரை அழைத்துக்கொண்டு நீ படகுக்குப் போ. இதோ நான் வந்து விடுகிறேன்'' என்று சொல்ல, பொன்னனும் விக்கிரமனும் உடனே வெளியேறினார்கள்.

அருள்மொழி தேவி அப்போது சிவனடியார் பாதத்தில் நமஸ்கரித்து, அந்தப் பாதங்களைப் பிடித்துக் கொண்டவண்ணம் சொன்னாள்.

''சுவாமி! தாங்கள் யாரோ எனக்குத் தெரியாது. என்னவெல்லாமோ தங்களைப் பற்றி நான் சந்தேகித்தது உண்டு. ஆனால், தாங்கள் எங்கள் நன்மையை நாடுகிறவர் என்பதில் சந்தேகப்பட்டதே இல்லை; அதனால் தங்களை யாரென்று தெரிந்துகொள்ளவும் நான் ஆசைப்படவில்லை. தாங்கள் யாராயிருந்தபோதிலும் சரி. அடியாளுக்கு ஒரு வரந்தர வேண்டும். எனக்குத் தங்களைத் தவிர வேறு கதி கிடையாது.''



சிவனடியாரின் கண்களில் கண்ணீர் துளிர்த்தது.

''என்னால் முடிகிற காரியமாயிருந்தால் கட்டாயம் செய்கிறேன், அம்மா! கேள்'' என்றார்.

''தாங்கள் மகான். தங்களால் முடி யாத காரியம் ஒன்றுமே இருக்க முடியாது. வேறென்ன நான் கேட்கப் போகிறேன்? என் பிள்ளையின் உயிரைத் தாங்கள் காப்பாற்றித் தர வேண்டும் சுவாமி! இவன் இப்போது செய்யப் போகிற காரியம் வெற்றி பெறும் என்ற நம்பிக்கை எனக்கில்லை. மகா சக்தி வாய்ந்த பல்லவ சக்கரவர்த்தியை எதிர்த்து இளம் பிள்ளையால் என்ன செய்ய முடியும்? எல்லாம் தெரிந்த தாங்களும் இந்தக் காரியத்தில் இவனை ஏவி விட்டிருக்கிறீர்கள். தங்களுடைய நோக்கம் என்னவோ தெரியாது. சுவாமி! என்னாவாயிருந்தாலும், அவனுடைய உயிரைக் காப்பாற்றிக் கொடுக்கும் பொறுப்பு தங்களுடையது'' என்று ராணி தழுதழுத்த குரலில் கூறினாள்.

''உயிரைக் காப்பாற்றும் சக்தி வாய்ந்தவர் கடவுள் ஒருவர்தான். அம்மா! ஆனாலும் ஓர் உறுதி சொல்லுகிறேன். விக்கிரமனுடைய வீரத் தந்தையின் ஆத்மா அவன் பக்கத்திலிருந்து அவனைக் காப்பாற்றும். நீ கவலைப் படாதே, எழுந்திரு!'' என்றார்.

அச்சமயம் மேற்குத் திசையில் தூரத்தில் குதிரையின் குளம்படிச் சப்தம் கேட்கவே, சிவனடியார் விரைவாக விடைபெற்றுக் கொண்டு கிழக்குத் திசையை நோக்கிச் சென்றார்.

சிவனடியார் சென்ற சற்று நேரத்திற்கெல்லாம் மாரப்ப பூபதி குதிரை மீது வந்து இறங்கினான். உடனே, ''விக்கிரமா! சிவனடியார் வரப் போகிறாரென்று சொன்னாயே? வந்து விட்டாரா?'' என்று கேட்டான்.

''இப்போதுதான் போனார், சித்தப்பா! போய்ச் சில விநாடி நேரங்கூட ஆகவில்லை. சற்று முன்னால் வந்திருக்கப் படாதா!'' என்று விக்கிரமன் சொல்லிச் சிவனடியார் போன திசையை நோக்கினான்.

அதைப் பார்த்த மாரப்பன், ''இந்தச் சாலை வழியாகத்தானே போனார்? இதோ அவர் முகத்தைப் பார்த்துவிட்டு வந்து விடுகிறேன்'' என்று கூறி மறுபடியும் குதிரை மேலேறி விரைந்து சென்றான்.

ஆனால், அவன் அந்த நதிக்கரைச் சாலையோடு வெகுதூரம் குதிரையை விரட்டிக் கொண்டு போயும் சிவனடியார் தென்படவில்லை. அவர் மாயமாய் மறைந்து விட்டார்.

(தொடரும்)

# மலையைப் புரட்டிய

**வா**ழ்ந்த காலம் வரைக்கும் அரசாங்கத்தால், மீடியாவால் சீந்தப்படாதவர் தசரத் மஞ்சி. Dashrath Manjhi என்னும் பெயரைப் போட்டு இணையதளத்தில் தேடினால், கிடைப்பது சொற்ப செய்திகளும் பிறகு, தபால்தலை அளவுக்கு ஒரு புகைப்படமும் மட்டுமே. ஆனால், அவர் இறந்தபோது அவருக்காக பத்திரிகைகளில் ஒரு பத்தி ஒதுக்கினார்கள். அரச மரியாதையுடன் அவர் இறுதிச் சடங்குகள் நடக்கப் போகிறது என்று தெரிந்ததும் அனைவரும் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். யார் இவர்? அப்படி என்ன சாதித்தார்?

**கா**லர் காதி (Gahlaur Ghati) என்று ஒரு மலைப்பகுதி. பீகார், கயா மாவட்டத்தில் உள்ளது. பாட்னாவிலிருந்து 150 கி.மீ. மலையின் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் மக்கள் வசிக்கும் பிரதேசங்கள் உள்ளன. இடையில் ஒரு குறுகிய ஒற்றையடிப் பாதை.

கிட்டத்தட்ட அறுபது கிராமங்களைச் சேர்ந்த மக்கள் அந்த ஒற்றையடிப் பாதையைத்தான் பல ஆண்டுகளாகப் பயன்படுத்திக் கொண்டிருந்தார்கள். பாறையோடு பாறையாக பல்லி போல் ஊர்ந்து சென்றால் மட்டுமே அந்த வழித்தடத்தைக் கடக்க முடியும். இத்தனைக்கும் வேறு வழியும் இல்லை. காபித் தூள் முதற்கொண்டு தலைவலி மாத்திரை வரை எல்லாவற்றையும் அந்த வழியாகத்தான் போய் வாங்கியாக வேண்டும். ஆர்வமுள்ளவர்கள் மலையில் கையை, காலைப் பதித்து முன்னேறிப் போகலாம். ஆனால், உயிருடன் அந்தப் பக்கம் போய்ச் சேருவோம் என்று சொல்ல முடியாது.

அரசாங்கம் ஏதாவது செய்யும் என்னும் அதீத நம்பிக்கையுடன் கன்னத்தில் கை வைத்து காலம் கடத்திக் கொண்டிருந்தார்கள் பாட்னா பல்லி மனிதர்கள். தசரத் மஞ்சிக்கு இது பிடிக்கவில்லை. மக்களிடம் சென்று பேசினார். ''ஐயா, அரசாங்கத்தை நம்பிப் பிரயோஜனமில்லை. அவர்கள் வந்து ரோடு போடுவார்கள் என்று காத்திருந்தால் இன்னும் ஐந்து தலைமுறைக்கு நாம் இப்படியே இருந்துவிட வேண்டியதுதான். வாருங்கள், எல்லோரும் சேர்ந்து இந்த மலையை உடைப்போம்.''



* தசரத் மஞ்சி

வெள்ளை மீசை, தாடி. பலகீனமான தேகம். பலமாகக் காற்று வீசினால் பறந்தே பாட்னாவுக்குப் போய்விட முடியும் என்பது போன்ற உடல்வாகு. ஏற - இறங்க பார்த்தார்கள் கிராமவாசிகள். ஒரே வார்த்தையில் ''ப்போ பெருசு, போய் வேலையைப் பாரு.''

சரி என்று தலையை ஆட்டிவிட்டு வேலையைப் பார்க்க ஆரம்பித்தார் தசரத் மஞ்சி. மறுநாள் காலை. ஒரு சுத்தியல், ஒரு மண்வெட்டி, ஒரு ஈட்டி. மூன்றையும் எடுத்துக் கொண்டு ஆஜராகிவிட்டார், அந்த மலையின் வால் பகுதியில். சுத்தியலைக் கொண்டு



அடிக்க ஆரம்பித்தார்.

ஒரு நிமிடம் கற்பனை செய்து பாருங்கள். ஓங்கி வளர்ந்த ஒரு மாபெரும் மலைக்குக் கீழே விட்டுவிட்டுக் கேட்கும் 'லொட்டு லொட்டு' சத்தம். மலை, அதை உடைக்க ஒரு பலவீனமான சுத்தியல்.

ஒருநாள் கூட லீவு போடவில்லை தசரத் மஞ்சி. சம்பளம் எங்கே, பிரமோஷன் எங்கே என்று ஒருவரிடமும் ஒரு வார்த்தையும் கேட்கவில்லை. கையோடு சாப்பாடு கொண்டு வந்துவிடுவார். அடிக்கடி நீர் அருந்துவார். முகம் முழுவதும் வியர்வையால் நனைந்துவிட்டால் கையோடு கொண்டு வந்திருக்கும் துண்டால் துடைத்துக் கொள்வார். பிற்பாடு, வெயிலைச் சமாளிக்க தலையில் ஒரு பாலிதீன் கவர் தொப்பியைத் தயாரித்து அணிந்து கொண்டார்.



**22 ஆண்டுகள்; 360 அடி நீளம்; 30 அடி அகலம்; பாதை ரெடி!**

மொத்தம் இருபத்து இரண்டு ஆண்டுகள். 360 அடி நீளமும் 30 அடி அகலமும் கொண்ட பாதையைப் போட்டு முடித்தார் மஞ்சி.

இப்போது அட்ரி என்னும் பகுதியிலிருந்து வசிர்கஞ்ச் என்னும் பகுதிக்குப் போக வேண்டுமென்றால் வெறும் பத்து கிலோ மீட்டரைக் கடந்தால் போதும். முன்பெல்லாம் 50 கி.மீ. போக வேண்டியிருக்கும். எட்டு கி.மீ. நடந்து பள்ளிக்கூடம் சென்றுகொண்டிருந்த குழந்தைகள் இப்போது மூன்று கி.மீ. பயணம் செய்தால் போதும். துள்ளிக் கொண்டு ஓடுகிறார்கள்.

சந்தோஷம் தாங்காமல் பல்லி மனிதர்கள் வாய்விட்டுக் கத்தி விட்டார்கள். ''யோவ், பெரிசு, 'உண்மையிலேயே சாதிச்சுட்டயா!'' அப்படியா, சரி என்று சுத்தியலை எடுத்துக்கொண்டு வீட்டுக்குப் போய்விட்டார் மஞ்சி.

அங்கே யார் இருக்கிறார்கள்? பாவம் கஷ்டப்படுகிறாரே என்று சாப்பாடு கொண்டு வந்த மனைவி ஃபகுனி தேவி அதே மலைத் தொடரில்தான் கால் இடறி விழுந்து உயிரை விட் டார். அதனால், சில நாள்கள் மஞ்சி விடுப்பு எடுக்க வேண்டியிருந்தது வேறு விஷயம்.

ஆகஸ்ட் மத்தியில் கான்சர் வந்து தனது எழுபத்து மூன்றாவது வயதில், மஞ்சியும் இறந்துபோனார். அவரைப் பார்க்க திரண்டு வந்த மக்களுக்குத் துக்கத்துடன் சேர்ந்துச் சில சந்தேகங்களும் முளைத்தன. இந்த நோஞ்சான் ஆசாமியால் எப்படி அந்த மலையை உடைக்க முடிந்தது? ஒரு தம்ளர் டீகூட யாரும் அவருக்கு வாங்கித் தந்ததாகத் தெரியவில்லையே. அவரைப் பற்றி முழுவதுமாகத் தெரிந்து கொள்வதற்கு முன்னால் அவரை இழந்து விட்டோமே!

(மஞ்சியின் போராட்டங்கள் அடுத்த இதழில்)

**உள்ளி! புறமும்...**

**எஸ். நடராஜன்**



குருதி கொப்பளிக்கும்
என் காயங்களிலிருந்து
தாகம் தணிக்க
ஒரு கோப்பை கேட்டாய்.
எதற்கும்
நீ அருந்தப் போதாதென
இரண்டாவதாய்
ஒரு கோப்பை தந்தேன்.
தாகம் தணிந்ததும்
வழக்கமாய்
முகம் சுளித்தபடி
நீ வீடு சென்றுவிட்டாய்.
கரிக்கும் சுவையல்லாது
பானம் தரும் முறைமையில்
மீண்டும் ஒருமுறை
நான் தவறிவிட்டேன்.



# மீண்டும் தவறிவிட்டேன்



மகாதேவர் என்ற சிவனுக்கான ஆலயம் இங்கே அமைந் திருக்கிறது.

ராமநாதனுக்கு மட்டுமல்ல, எனக்குள்ளும் அமைதி வியாபிக்கத் தொடங்கியிருந்தது. அதற்குக் காரணம் எதிரில் காட்சி தந்த திருக்குளம். ஒவ்வொரு குளத்துக்கும் கூட ஒரு தன்மை இருப்பதை உணர முடியும். ஜ்யோதி ஸரில் காட்சி தந்த அந்தக் குளத்தின் தன்மை 'அமைதி' போலும்? போருக்குப் பெயர்போன இடத்துக்கருகே அமைதியை உணர்த்தும் குளம்! 'ஸீதா தீர்த்' என்று இதைக் குறிப்பிடுகிறார்கள். அங்கு நாங்கள் சந்தித்த பண்டா ஒருவர் இப்படிக் குறிப்பிட்டார் : ''கடும் கோடையிலும்

# நீதான்

## குருக்ஷேத்ரம் 7

**எ**ங்களைச் சுமந்து சென்ற வாகனம் நின்றது. 'ஜ்யோதிஸர்' என்றது அறிவிப்புப் பலகை. காரிலேயே காலணிகளை விட்டுவிட்டுத்தான் இறங்கினார் ராமநாதன். ''இதுவரை காதிலே ஏதோ போர்முரசு ஒலிச்சிக்கிட்டேயிருந்தது. இப்போ ஒரு தனி அமைதி'' என்றார்.

குருக்ஷேத்ர ரயில் நிலையத்திலிருந்து சுமார் எட்டு கி.மீட்டர் தூரத்தில் உள்ளது ஜ்யோதிஸர். ஜ்யோதிஸர் இங்கே குளுமையாக இருக்கும். சன்னி ஹித் மற்றும் பிரம்ம சரோவருடன் ஒப்பிட முடியாது என்றாலும், இந்தத் திருக்குளமும் அளவில் பெரியதுதான்.

பெரியதொரு மேடை காட்சி தருகிறது. அதற்குச் சற்றுத் தள்ளி 'சரஸ்வதி மந்திர்' ஆலயம். சுற்றிலும் மகாபாரதக் கதாபாத்திரங்கள் துரோணர் - துரியோதனன், திருதராஷ்டிரர் - சஞ்சயன், சூரியன் - அர்ச்சுனன் - கிருஷ்ணன், கிருஷ்ணனுடன் அர்ச்சுனன் - பீஷ்மர் - நாரதர் என்று ஸெட்டாகக் காட்சி தருகிறார்கள்.

மேடையை நோக்கி படிக்கட்டுகளில் நடக்கத் தொடங்கினோம். ஜருகண்டி சற்று வேகமாகவே செல்லத் தொடங்கியிருந்தான்.

மேடையின் நடுப்பகுதியில் காட்சியளித்தது அந்த ஆலமரம். அதனருகே பெரியதாக கீதோபதேசக் காட்சி

சலவைக் கல்லில், கண்ணாடி அறை ஒன்றுக்குள் காட்சியளித்தது.

ஆலமரத்தின் நடுப்பகுதியில் ஒரு பலகை. அதில் 'சாகாவரம் பெற்ற ஆல மரம் - தெய்வீகம் பொருந்திய பகவத் கீதை கூறப்பட்டதற்கான சாட்சி' என்ற குறிப்பு.

மரத்தின் மீது நிறைய சிவப்புக் கொடிகள் பக்தி அடையாளமாகத் தொங்கிக் கொண்டிருந்தன. அருகே சலவைக் கல்லில் ஸ்ரீகிருஷ்ணரின் பாதப் பிரதிமைகள். நாங்கள் நிற்கும் இடத்தின் மேன்மையை நினைக்கநினைக்க மெய்ச் சிலிர்த்தது. சட்டென்று தழுவி நகர்ந்த குளிர்க் காற்று, பல செய்திகளை உணர்த்திச் சென்றது.

"நீ இப்போது நின்றுகொண்டிருக்கும் இதே இடத்தில்தான் அர்ஜுனனின் ரதம் நின்றுகொண்டிருந்தது.

**உ**ண்மையான வீரனுக்குப் போர்க்களத்தில் புகும்போது அந்த வீரம் அதிகரிக்கும். ஆனால், மகாவீரனான அர்ஜுனனின் கால்கள் குருக்ஷேத்திரத்தின் இந்தப் பகுதியில்தான் பலவீனம் அடைந்தன.

காலத்தில் விளங்கிய பலரையும், இன்னமும் அப்படி விளங்கும் சிலரையும் கொல்லப் போகிறது என்பதையும் எண்ண, அவன் கைகள் தன்னிச்சையாக வில்லையும் அம்புகளையும் கீழே போட்டதும் இங்குதான். சோர்ந்துபோய் நிற்கவும் முடியாமல் தடுமாறியதும் இங்குதான்.

'இந்தப் போர் வேண்டாம்; இதனால் கிடைக்கும் ஆட்சி வேண்டாம்; அதிகாரம் வேண்டாம். இந்தப் பாவத்தைச் செய்ய நான் உடன்பட மாட்டேன்' என்றான். அர்ச்சுனனின் குழப்பத்தை, மயக்கத்தை, தயக்கத்தைப் போக்கும் விதமாக அவனுக்கு கண்ணபிரான் பகவத் கீதையை அருளியதும், இதோ நீ நின்றுகொண்டிருக்கிறாயே இந்த இடத்தில்தான்!"

**கா**ற்று உணர்த்திய செய்தி புல்லரிப்பை ஏற்படுத்தியது. ஒரு கணம் 'இந்த இடத்தை இன்னும் எவ்வளவோ அலங்கரித்திருக்கலாமே!' என்று தோன்றியது. ஆனால், அடுத்த கணமே அந்த யோசனையின் மடத்தனமும் புலப்பட்டது.

# வேண்டும் கண்ணா!

அருண் சரண்யா

எதிரே நூறு சகோதரர்கள். அஸ்வத்தாமன் போன்ற பால்ய நண்பர்கள். போதாக் குறைக்கு துரோணர், கிருபர் ஆகிய தம் ஆசான்கள். அதுவும் தம் பாட்டனார் பீஷ்மரைக் கண்டபோது அர்ச்சுனனுக்கு மனம் பொங்கியது! தன்னைச் சீராட்டி வளர்த்த அவருடைய நெஞ்சைக் குறிவைக்கப் போகிறோமோ என்ற நினைப்பே கசப்பைத் தந்ததும் இங்குதான்.

தமது எந்த வில்லாற்றல் குறித்து அர்ஜுனனுக்கு நியாயமான கர்வம் உண்டோ, அந்த ஆற்றலைப் பெற்றதற்காக அவனுள் பதற்றம் ஏற்பட்டதும், அந்த ஆற்றல் அல்லவா தன் அன்புக்குரியவர்களாக ஒரு

அப்படியெல்லாம் செய்யாதவர்களுக்கு ஆயிரம் நன்றிகள் கூறத் தோன்றியது.

பொதுவாக ஒரு கோயில் கொஞ்சம் பிரபலமடைந்தால்கூட அதைச் சுற்றி பல கடைகள் என்று தொடங்கி, சாலைகளில் நெருக்கம் அதிகமாகி தெய்வத்தைப் பார்க்கும்போது மனநெருக்கம் கணிசமாகக் குறைந்துவிட்டிருக்கும். மாறாக இவ்வளவு பெரிய நிகழ்ச்சி நடைபெற்ற ஜ்யோதிஸர், எந்தக் கர்வமும் இல்லாமல் கடைந்தெடுத்த கிராமமாகவே இருக்கிறது. அதனாலேயே அதன் ரம்மியம் மனத்தில் பதிகிறது. அந்த ஆலமரத்தின் சிறப்பு அதன் எளிமையாலேயே மனத்தில் சிம்மாசனம்

போட்டு உட்கார்ந்து கொள்கிறது.

அருகிலிருந்த படிக்கட்டு ஒன்றில் மூவரும் உட்கார்ந்து கொண்டோம். சில மணித்துளிகளுக்கு யாருமே பேசவில்லை.

ஜருகண்டிதான் மெல்ல பேசத் தொடங்கினான். "பாரதப் போரின் தொடக்கம் என்று கீதோபதேசத்தைக் கூறலாம் இல்லையா?" என்றான்.

அதற்கும் முன்பாகவே போரின் துவக்கம் என்று கூறக்கூடிய வேறொன்று ராமநாதனின் நினைவில் எட்டிப் பார்க்க, அதைப் பகிர்ந்து கொண்டார்.

"போரில் யார் வெல்வார்கள்?

சிறந்த மூகூர்த்தத்தில் லட்சணமான இளைஞன் ஒருவனை பலி கொடுப்பவர்தான்- இந்த



# கண்ணன், சதுர்த்தசி அன்றே அமாவாசை

நம்பிக்கை ஆழமாக நிலவிய அந்நாளில் இதுகுறித்து ஆலோசனை பெற துரியோதனன் பீஷ்மரை அணுகினான்.

"முகூர்த்தம் குறிப்பதில் சகாதேவன் வல்லவன். அர்ஜுனன் மகன் அரவான் மிகவும் லட்சணமானவன்."

இப்படி பீஷ்மர் கூற, சகாதேவனை உடனடியாக அணுகினான் துரியோதனன். எதிரி வெல்வதற்குச் சரியான முகூர்த்த நேரத்தைக் குறித்துக்கொடுக்கும் அளவுக்கு சகாதேவன் நேர்மையானவன் என்பது அவனுக்குத் தெரிந்திருந்தது.

அவன் நம்பிக்கை வீண்போகவில்லை. கணக்குப் போட்டுப் பார்த்த சகாதேவன், "மார்கழி மாதத்தில் சூரிய சந்திரர்கள் கூடிய அமாவாசையன்று இரவு களபலி கொடுக்கலாம்" என்றான். அடுத்து அரவானிடம் சென்றான் துரியோதனன். எதிரியே ஆனாலும் வேண்டிக் கேட்டுக்கொண்டதனால் களபலியாக இசைந்தான் அரவான்.

"கண்ணனின் சூதுதான் மகாபாரதப் போரில் பாண்டவர்களை வெல்லச் செய்தது என்பவர்கள், எதிரிகளின் நேர்மையை எந்த அளவுக்குத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள துரியோதனன் திட்டமிட்டான் என்பதையும் கவனிக்க வேண்டும்" என்று இந்த இடத்தில் குறிப்பிட்டார் ராமநாதன்.

விவரம் அறிந்த கண்ணன் முன் தினமான சதுர்த்தசி அன்றே அமாவாசை வரும்படிச் செய்தார். சூரிய சந்திரர் அவரிடம் வந்து "கண்ணா, சதுர்த்தசியாகிய இன்றைய நாளை அமாவாசை எனலாமா?" என்று கேட்டனர். "இதோ நீங்கள் இருவரும் சேர்ந்து வந்திருக்கிறீர்கள். நீங்கள் இருவரும் கூடிய நாளை அமாவாசை என்று கூறக் கூடாதா?" என்று பதில் கேள்வி கேட்டார் கண்ணன். அவர்களும் ஒப்புக்கொண்டனர். அடுத்து அரவானிடம் "அமாவாசை வந்தும் துரியோதனன் உன்னை அணுகவில்லை. எனவே, பாண்டவர்களின் சார்பில் உன்னைக் களபலியாக்கலாமா?" என்று கேட்கப்பட, அரவான் சம்மதித்தான்.

பாண்டவர் தரப்பு வெற்றிக்குப் பிள்ளையார் சுழி போடப்பட்டது.

கண்ணன் மகாபாரதப் போரில் சூதுகளைப் புரிந்து பாண்டவர்களுக்கு வெற்றி தேடித் தந்ததாகக் குற்றம் சாட்டுபவர்களை ஒன்று கேட்கிறேன்" என்றபோது அவர் பார்வை ஜருகண்டியின் மீது பதிந்தது.

"கண்ணன் தன்புறம் இருக்கத் தேவையில்லை என்று தீர்மானித்தது துரியோதனனா அர்ஜுனனா? அவர்கள் இருவரும் தன் உதவியை நாடியபோது 'இந்தப் போரில் நான் ஆயுதம் எடுத்துப் போரிடப் போவதில்லை. என்னுடைய கடல்போன்ற

## வரும்படிச் செய்தார்!

சேனையை ஒருவருக்கும், என்னை மற்றொருவருக்கும் அளிக்கிறேன். யாருக்கு எது விருப்பம்?' என்று கேட்ட மாத்திரத்தில் ''நீதான் கண்ணா வேண்டும்'' என்று பார்த்தனும், ''உன் சேனைதான் வேண்டும்'' என்று துரியோதனனும் தீர்மானித்தார்களே! தான் பாண்டவர் தரப்பு எனும் போதே கண்ணனின் மதியூகமும் அவர்களின் தரப்பில்தானே செயல்பட வேண்டும்.

ஒன்றைப் புரிந்துகொள்ள வேண்டும். குருக்ஷேத்ர யுத்தத்துக்குச் சில நாட்களுக்கு முன்புகூட அந்தப் போரைத் தவிர்க்க முயற்சித்தார் கண்ணன். ரேவதி நட்சத்திரத்தன்று கிளம்பிய நாள் வரை (அதாவது சுமார் ஆறு நாட்கள்) அங்கு அமைதிப் பேச்சு வார்த்தை நடத்தினார். ஆனால், போர்தான் முடிவு என்பதில், சகுனியின் தூண்டுதலால் துரியோதனன் குறியாக இருந்தான்.

ஆக, கண்ணனைப் பலவிதங்களில் அலட்சியம் செய்து தங்கள் முடிவைத் தாங்களாகவே தேடிக்கொண்டவர்கள் என்றுதான் கௌரவர்களைக் கூறவேண்டும்'' என்றவர் மீண்டும் அந்தப் புகழ் பெற்ற ஆலமரத்தைப் பார்த்தார்.

அந்த ஆலமரத்துக்கு விழுதுகள் அதிகம் இருக்கவில்லை. ஆனால், கண்ணுக்குத் தெரியாமல் அது பாரதமெங்கும் தன் கீதை விழுதுகளைப் பரப்பி வருவது போல் தோன்றியது.

குருக்ஷேத்ரத்திலிருந்து கிளம்பினோம்.

''மகாபாரதப் போர் எதற்காக நடைபெற்றது என்று நினைக்கிறாய்?'' என்று ஜருகண்டியைக் கேட்டார் ராமநாதன். ''பங்காளிக் காய்ச்சல்'' என்றோ ''சொத்துத் தகராறு'' என்றோ கூறுவான் என நினைத்தேன்.

''பகவத் கீதைக்காக; குருக்ஷேத்ரத்தின் மேன்மையை உணர்த்துவதற்காக'' என்றான் ஜருகண்டி.

*(பயணம் முடிந்தது)*




# ஓடி

"ஏலே ரெங்கராசு. என்னமோ நாளான்னைக்கி கலெக்டரு ஆபீசுலேர்ந்து அதிகாரிங்க எல்லாம் நம்ப ஊருக்கே வர்றாங்களாம். எனக்கு முதியோர் பென்சன் கிடைக்க அவுங்களாவது வழி பண்ணு வாங்களா?'' என்று எதார்த்தமாகக் கேட்கிறாள் தங்கம்மாள் பாட்டி.

''நாளான்னைக்கி உன்னோட மேட்டரைச் சொல்லு பெரியாயி. கச்சிதமா அவுங்களே உனக்கு முதியோர் பென்சன் வர்றதுக்கு வழி பண்ணிடுவாங்க!'' என்கிறார் ரெங்கராசு. -இது ஏதோ கற்பனை வார்த்தைகள் அல்ல. கரூர் மாவட்டத்தின் தொலைதூரக் கிராமங்களில் உலவிவரும் உரையாடல் இது. கரூர் கலெக்டரின் 'ஓடி வரும் உன்னதம்' என்கிற திட்டம்தான் இவ்வாறு பேச வைத்திருக்கிறது.

மாவட்டத் தலைநகரிலிருந்து மிகவும் உள்ளடங்கிய தொலைதூரக் கிராமப் பகுதிகளுக்கு, கலெக்டர் ஆபீசிலிருந்து அலுவலர் குழு ஒன்று செல்கிறது. அப்படிச் செல்பவர்கள் குறிப்பிட்ட கிராமங்களின் மையப்பகுதியில் முகாம் அமைத்துத் தங்கி விடுவதில்லை. ஒவ்வொரு வீட்டுக்கும் சென்று தகவல்கள் சேகரிக்கின்றனர்.

இக்குழுவினரிடம் பொது மக்கள் எந்த மனுவும் கொடுக்கத் தேவையில்லை. சாதிச் சான்றிதழ், வருமானச் சான்றிதழ், பிறப்பு - இறப்புச் சான்றிதழ், வீட்டு மனைப் பட்டா, புதிய ரேஷன் கார்டு விண்ணப்பம், தேசிய உடல் ஊனமுற்றோர் அட்டை எனப் பல்வேறு அடிப்படைத் தேவைகள் குறித்து புள்ளிவிவரங்கள் சேகரிக்கப்படுகின்றன. சேகரிக்கப்பட்ட தகவல்கள் அனைத்தும் மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகம் வந்து சேர்கின்றன. கிராமப்பகுதி மக்களின் ஒவ்வொரு தேவையும், ஆய்வு செய்யப்பட்டு பின்னர் அந்தச் சான்றுகள் அனைத்தும் அந்தந்தக் கிராமப்பகுதிகளுக்கு அனுப்பி வைக்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட நாளில், மாவட்ட ஆட்சித் தலைவர் கிராமத்துக்கு நேரில் செல்கிறார். ஒவ்வொரு வீட்டையும் தேடிச் சென்று அவர்களுக்கான சான்றிதழ்களை, அவரே தன் கைப்படத் தருகிறார்.

''என் கணவர் சவரத் தொழிலாளி. அவர் இறந்து நான்கு வருடம் ஆகிறது. விதவைகங்க பிரிவில முதியோர் பென்சனுக்காக ரெண்டு வருசமா அலைஞ்சிகிட்டிருந்தேன். கிடைக்கவே இல்லை. ஆபீசருங்க எல்லாம் வீடு தேடி வந்து பதிஞ்சிட்டுப் போனாங்க. இப்ப நாலு மாசமா. எனக்கு முதியோர் பென்சன் வந்துக்கிட்டு இருக்கு!'' என்கிறார் சின்னதாராபுரம் ஒன்றி



# வரும் உன்னதம்!

யம் வடகரை கிராமத்தில் வசித்து வரும் அங்கம்மாள் (65).

அரவாக்குறிச்சி தாலுகா, அகிலாண்ட புரம் கிராமம். தாழ்த்தப்பட்டோர் குடியிருப்புப் பகுதியில் பிள்ளைகள் அனைவருக்கும், அவரவர் இருப்பிடம் தேடியே வந்து சேர்ந்திருக்கிறது சாதிச் சான்றிதழ்.

சின்னதாராபுரம் ஒன்றியத்தில், ஆயிரம் பேர் வசிக்கும் கிராமம் நஞ்சைக்காலக் குறிச்சி. பல ஆண்டுகளாக ஒரே ஒரு குடிநீர்த் தொட்டி மட்டுமே அங்கு உபயோகத்தில் இருந்து வந்துள்ளது. அதனால் குடிநீர்ப் பஞ்சம். தற்போது அங்கே இன்னொரு மேல்நிலை நீர்த்தேக்கத் தொட்டி கட்டப்பட்டு இயங்கி வருகிறது. அதுபோல தெரு விளக்குப் பராமரிப்பு மற்றும் சாலை வசதிகள் உட்பட பலவும் ஓடி வரும் உன்னதம் என்ற திட்டத்தின் மூலம் கவனத்தில் கொள்ளப்படுகிறது.

''கரூர் மாவட்டத்தின் கடவூர் ஒன்றியத்தில் சுமார் ஆறாயிரம் சாதிச் சான்றிதழ்கள், ரூபாய் பத்து லட்ச அளவில் நலத்திட்ட உதவிகள்; சின்னதாராபுரம் ஒன்றியத்தில் சுமார் ஒன்பதாயிரம் சாதிச் சான்றிதழ்கள், ரூபாய் எழுபத்தைந்து லட்சத்துக்கு நலத்திட்ட உதவிகள். கிருஷ்ணராயபுரம் ஒன்றியத்தில் சுமார் ஏழாயிரம் சாதிச் சான்றிதழ்கள், ரூபாய் தொண்ணூற்று நான்கு லட்சத்துக்கு நலத்திட்ட உதவிகள் என 'ஓடி வரும் உன்னதம்' திட்டம் வாயிலாகத் தரப்பட்டுள்ளன'' எனச் சொல்கிறார் கரூர் மாவட்ட வருவாய்த்துறை அதிகாரி.

'ஓடி வரும் உன்னதம்' புள்ளிவிவர தகவல் சேகரிப்பின்போதே, ஒவ்வொரு கிராமத்திலும் உரிய வயதிருந்தும் முதல் வகுப்பில் சேராத பிள்ளைகள் மற்றும் பள்ளியில் இடை நின்ற பிள்ளைகள் குறித்து விவரங்கள் கணக்கெடுக்கப்படுகிறது. துவக்கப் பள்ளி கல்வியை ஊக்கப்படுத்தும் நோக்கில், மாவட்ட ஆட்சித் தலைவரே குறிப்பிட்ட பிள்ளையின் வீடு தேடிச் சென்று அந்தக் குழந்தைக்கு மாலை அணிவித்து பின்னர் பள்ளிக்கு அழைத்து வந்து சேர்த்து விடுகிறார்.

''என்னோட ரெண்டாவது பொண்ணுக்கு வயசு ஏழு. ஸ்கூல்ல சேர்த்து விடாமத்தான் வெச்சிருந்தேன். பொம்பளை புள்ளையா இருந்தாலும் படிச்சிக்கிட்டா நல்லதுன்னு கலெக்டர் எங்களுக்கு எடுத்துச் சொன்னாரு. அதுக்கப்புறமா இப்ப ஒண்ணாங்கிளாஸ்ல சேர்த்திருக்கேன்!'' எனக் கூறுகிறார் க.பரமத்தி ஒன்றியம் மொ.தொட்டம்பட்டி கிராமத்தின் மோகன சுந்தரி.

'' 'ஓடி வரும் உன்னதம்' மற்றும் 'வாருங்கள் பள்ளிக்குச் செல்வோம்' போன்ற செயல்பாடுகளுக்கு கரூர் மாவட்டப் பொது மக்களிடையே பெரும் வரவேற்பு இருக்கிறது. மாவட்டத்தின் கடைக்கோடி கிராம மக்களுக்கும் எளிதாக எல்லாத் தேவைகளும் கிடைக்கச் செய்திட வேண்டும் என்பதே இந்தத் திட்டச் செயல்பாடுகளின் நோக்கம்!'' எனக் கூறுகிறார் கரூர் மாவட்ட ஆட்சித் தலைவர் தி.ந.வெங்கடேஷ்.

-ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

படங்கள் : கரூர் போட்டோ மதி

# கிராஃபிக்ஸ்



''மன்னர் சினிமா பார்த்து ரொம்பக் கெட்டுப் போயிட்டார்.''

''ஏன் அப்படிச் சொல் றீங்க...?''

''போர்க்களத்துக்குப் போகா மலேயே தான் போர் புரிவது போல கிராஃபிக்ஸ் பண்ண முடியுமான்னு கேட்கிறார்.''

– எஸ்.இராஜேந்திரன்



''நம்ம ஆபீஸ் ஊழியர் களோட லீவ் லெட்டர் ஃபைலைக் கேட்கறீங்களே! ஏன் சார்?''

''ரெண்டு நாள் லீவ் போடப் போறேன். நல்ல காரணமா ஞாபகம் வர மாட் டேங்குது!''

– வி.மீனா



''உங்க உடம்புல போது மான அளவு இரும்புச் சத்து இல்லை...''

''அதுமட்டுமா டாக்டர்... என் பாக்கெட்லகூட உங் களுக்கு ஃபீஸ் தர போதுமான அளவு பணம் இல்லை.''

– ஜே.தனலட்சுமி




''டாக்டர் என் கணவர் தூக்கத்துல பேசறார்...''

''அப்பவாவது அவர் பேசட்டும்... விடுங்க!''

- எம்.ஏ.கண்ணன்

# போர்க்களம்!



''எனக்கு என் மருமகள் தெய்வம் மாதிரிடி!''

''எப்படி?''

''தினமும் ஏதாவது ஒரு பிரச்னையை உண்டு பண்ணி என்னைச் சோதிச்சுகிட்டே இருப்பா!''

- வெ.ராம்குமார்



''என்னைக் கல்யாணம் பண்ணும்போது ராணி மாதிரி வச்சுக்குவேன்னு சொன்னீங்கல்ல. ஆனா உங்களுக்கு இன்னொரு பொண்டாட்டி இருக்குதாமே?''

''அவ பேருதான் ராணி!''

- அ.ப.ஜெய்பால்

**7**

ஜகஜ்ஜால ஜோடி

சீக்ரெட் ஆஃப் சிறுநீரகம்

# நுட்பமான சந்திப்பு!

**ர**வியும் முருகனும் கிராமத்தில் பிறந்து அங்கேயே பள்ளிப்படிப்பை முடித்தவர்கள். முருகன் கல்லூரியில் படித்து, நகரத்தில் தனியார் நிறுவனம் ஒன்றில் உயர் அதிகாரி. ரவியோ பள்ளிப்படிப்போடு நிறுத்திவிட்டு, விவசாயப் பணியை மேற்கொண்டவன். இருவருக்கும் வெவ்வேறு கொள்கைகள்; வெவ்வேறு பழக்க வழக்கங்கள். இருவரும் ஒருநாள் கிராமத்தில் திருமண விழா ஒன்றில் சந்தித்துக் கொண்டபோது, கண்கள் கலங்கின. ஒருவரையொருவர் கட்டித் தழுவிக் கொண்டனர். ஆம்; பாலபருவத்துத்தூய நட்பு அங்கே இதய ஆழத்திலிருந்து தலைநீட்டியது.

இதேபோன்ற நுட்பமான சந்திப்பு, எங்களின் உள்ளேயும் நடந்தபடியே இருக்கிறது. ஆர்ட்டரி இரத்தக்குழாயின் நோக்கமும், பாதையும் வேறு. வெயின் ரத்தக் குழாயும் அப்படித்தான். பி.சி.டி. சுருண்ட குழல்கள், லூப் ஆஃப் ஹென்லே என்று பயணப்படும் நெப்ரான், கிளாமருலஸை ஒட்டியபடிச் செல்லும் ஆர்ட்டரி மற்றும் வெயின் இரத்தக் குழாய்களுக்கு இடையில் திரும்பி, கார்டெக்ஸ் பகுதியை நோக்கிச் செல்லும். இப்படிச் செல்லும் போது, ஆர்ட்டரி, வெயின்,ஹென்லே ஆகிய மூன்று குழாய்களின் நுட்பமான சந்திப்பு முக்கியமான ஒரு புள்ளியில் நிகழும். அந்த இடத்துக்கு ஜே.ஜி.அப்பாரெட்ஸ் (Juxta Glamerular Apparatus) என்று நாமகரணம் பண்ணியிருக்கிறார்கள். இந்த ஜே.ஜி.அப்பாரெடஸ் பகுதியை மொத்த குத்தகை எடுத்துக்கொண்டு, அங்கே கூட்டம் கூட்டமாய்க் குடியிருக்கும் சிறப்பு

வகை அணுக்களே - ரெனின் (Renin).

இவை உற்பத்திச் செய்யும் ரெனின் ஹார்மோன்கள்தான், உங்கள் ஒவ்வொரு வரது உடலின் இரத்த அழுத்தத்தையும் உயர்த்தக்கூடிய அதிகாரத்தைக் கையில் வைத்துக் கொண்டிருக்கின்றன. மத்தியில் ஆளும் காங்கிரஸை தனது கட்டுப்பாட்டில் வைத்திருக்கு கம்யூனிஸ்ட் பொலிட் பீரோ போலத்தான் இந்த ரெனின் அணுக்களும். பட்டுப்போய், அங்கே ஆஞ்சியோ டென்ஸின் என்னும் ஹார்மோனாக மாறும். இப்படி மாறிய ஆஞ்சியோ டென்சினை செமடென்ஷனோடு உள் வாங்கிக் கொள்ளும் ரிசப்டர்கள் (Receptors), உடலில் உள்ள அனைத்து இரத்தக் குழாய்களிலும் உண்டு. ரிசப்டர்கள், ஆஞ்சியோ டென்சினை உள்வாங்கிய அடுத்த விநாடியிலிருந்து, உடலின் இரத்த




டாக்டர் பி.ரவிச்சந்திரன்

எங்களுக்குள் இரத்தம் வருவது குறை வாக இருந்தால், எங்களின் கிளாமருல்லாக் களுக்கு இரத்தம் வருவது குறையும். இதன் தொடர்ச்சியாக கிளாமருல்லா பில்ட் ரேஷன் ரேட் குறையும். இப்படிக் குறைந் தால், கண்களில் விளக்கெண்ணெய் விட் டுக் கொண்டு, ரத்தத்தில் கண்காணித்தபடி வளைய வரும் தணிக்கை சிக்னல்கள், உட னடியாக ரெனின் அணுக்களுக்கு எச்சரிக் கைச் செய்தி அனுப்பும். அப்போது ரெனின் அணுக்கள் விரைந்து செயல்பட்டு, தங்களுக்குள் உற்பத்திச் செய்து தயாராக வைத்திருக்கும், ரெனின் திரவத்தை, தீய ணைப்பு வண்டியின் தீவிரத்தோடு இரத் தத்தில் பீய்ச்சி அடிக்கும். ரெனின் திரவம் நேரடியாகத் தனது வேலையைச் செய் யாது. அது நேராக கல்லீரலுக்குப் பயணப் அழுத்தத்தை அதிகப்படுத்தும் 'BPபிரளயம்' ஆரம்பமாகிவிடுகிறது.

சிறுநீர் மூலம் தொடர்ந்து நாங்கள் வெளியேற்றிவரும் உப்பை, வெளியேற விடாமல் பிடித்து வைத்துக்கொண்டு ஆஞ்சியோ டென்சின்கள் அடம்பிடிக்கின் றன. இதனால் உடலில் உள்ள நீரின் அளவு அதிகரிக்கிறது. நீரின் அளவு அதிகரிப்ப தால், இரத்த அழுத்தம் உயர்ந்துவிடுகிறது. இதைத்தான் உங்கள் மருத்துவர், உங் களுக்கு இரத்தக் கொதிப்பு இருப்பதாகக் கண்டுபிடித்துச் சொல்கிறார்கள்.

ஒருவருக்கு உடலில் ஐந்து லிட்டர் இரத்தம் இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். இப்போது அவரின் இயல்பான இரத்த அழுத்த அளவு என்பது 120mm-ஆக இருக்கும். இந்த ஐந்து லிட்

டரில் ஒரு லிட்டர் உடலில் இருந்து வெளியேறி விட்டாலோ அல்லது குறைந்து விட்டாலோ இரத்த அழுத்த அளவானது 100mm-ஆக கீழே போய்விடும். இது 70mm-க்கு கீழே சரிந்து அபாய அளவைத் தொட்டால், மூளைக்கும், உடலின் திசுக்களுக்கும் இரத்தம் செல்வது அதிரடியாகக் குறைந்து, உயிரிழப்பு நேரிடும். ஆனால், 100mm என்றவுடன் உடனடியாக ரெனின் அணுக்கள், ஹார்மோனைச் சுரந்து, 100mm என்கிற அளவைத்தாண்டி கீழே போக விடாமல், இரத்த அழுத்த அளவைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும்.

இந்த இடத்தில், ரெனின் உங்களுக்கு



இரத்தத்தில் உப்பின் அளவு அதிகரிக்கும் போது ரெனின் அளவு அதிகரிக்கிறது. அதனால் இரத்த அழுத்தமும் அதிகரிக்கிறது!

நண்பனா இல்லை எதிரியா? என்ற கேள்வி எழுவது இயல்பு. பரபரப்பான இன்றைய வாழ்க்கை முறையில் ரெனின் கொஞ்சம் எதிரிதான். தற்காலத்தில் நீங்கள் பின்பற்றி வரும் உணவு முறையில், இனிப்புச் சார்ந்த பண்டங்களைத் தவிர, உப்பில்லாமல் எதையும் சமைப்பதும் இல்லை; சாப்பிடுவதும் இல்லை. சுமார் ஒரு இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பு, உப்பை, கடல் நீரிலிருந்து தனியே பிரித்தெடுத்தோ, நிலத்திலிருந்து தாதுப்படிவமாக வெட்டியெடுத்தோ பயன்படுத்தத் தெரியாத நிலையில், நமது மனித குலம் குகையில் வாழ்ந்தது. அந்த ஆதிக்குடி மக்களின் ஆயுள், 130 வருடமாக இருந்ததை மானுடவியல் வரலாறு வியந்து சொல்கிறது. அவ்வளவு ஏன்? ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு வரை அரை உப்பு சாப்பிட்ட இதே மக்கள்தான், இப்போது எதற்கெடுத்தாலும் உப்பை விழுங்குகிறார்கள். காய்கறிகள், பழங்கள், தானியங்கள் இவற்றில், இயல்பாகவே இருக்கும் குறைந்த அளவு உப்பே, உடலுக்குப் போதமானது. இப்படி உணவு முறை விளைவாக உள்ளே செல்லும் உப்பு, உடலில் உபரியாகச் சேரும்போது, அதனைப் பிடித்து வைத்துக் கொள்ளும் ரெனின் அணுக்கள், தேவையான அளவு உப்பு உடலுக்குக் கிடைக்காதபோது, சேமித்து வைத்திருக்கும் உப்பை இரத்தத்தில் கலந்து விடும். இயற்கையின் இந்த ஏற்பாடு சிதையும் வண்ணம், தற்போதைய உணவு முறையில் உப்பு... உப்பு... என தப்பாகவே இருப்பதால், உப்பைப் பிடித்து வைத்துக் கொள்வதில் குறியாக இருக்கும் ரெனின், குறைந்த அளவில் இடைவிடாமல் சுரந்துகொண்டே இருக்கிறது.

இப்படி இரத்தத்தில் உப்பின் அளவு அதிகரிக்கும்போது ரெனினும் அதிகரிக்கிறது. ரெனின் அதிகரிப்பதால் இரத்த அழுத்தமும் அதிகரிக்கிறது. இன்னொரு புறம் உங்கள் பணிச் சுமை தரும் மன உளைச்சலும், மனச் சோர்வும் சேர்ந்து கொண்டால், கிளாமருல்லாவின் ஜல்லடையில் முதலில் வீக்கம் ஏற்படும். மனச்சோர்வை போக்கவும், பிரச்னைகளில் இருந்து தற்காலிகமாக விடுபடவும் நினைத்து, பீரோ, மதுவோ குடித்தால், கிளாமருல்லாவின் வீக்கம் புண்ணாக மாறுகிறது, புண் ஏற்பட்டுவிட்டால் ரெனின் சுரப்பது மேலும் அதிகரிக்கிறது. விளைவு! உயர் இரத்த அழுத்தம்... அதன் தொடர்ச்சியாகவே அடிக்கடி சிறுநீர், வலியுடன் சிறுநீர், படபடப்புடன் சிறுநீர் என ஏதேனும் ஒரு ஸ்டைலில் நாங்கள் சிறுநீரை வெளியேற்றுவோம். எங்கள் ராமுக்கும் கூட இப்போது சின்னதாக ஒரு சந்தேகம். பார்ட்டியில் குடித்த பீர், கிளாமருல்லாவைப் பதம் பார்த்திருக்குமோ?.... அவனது சந்தேகம் சரிதானா?...

**(இன்னும் பேசுவோம்)**

கடவுளைப் பார்க்க முடியுமா? எப்போது நம் கண்கள் அவரைக் காணும்? இன்று நம்மால் அவரைப் பார்க்க முடியவில்லையே? என்று அவர் நமக்குத் தெரிவார்? இந்தக் கேள்வியை நம்மாழ்வாரிடம் கேட்டால் அவர் எப்படி விடையளிப்பார்? இப்படி :

''அன்றே, நம் கண் காணும் ஆழியான் கார் உருவம்,
இன்றே, நாம் காணாது இருப்பதுவும் - என்றேனும்
கட்கண்ணால் காணாத அவ் வுருவை, நெஞ்சு என்னும்
உட்கண்ணால் காணும் உணர்ந்து.''

கட்கண் என்றால் புறக்கண்.

சக்கரக் கையனின் மேகக் கருப்பான உருவத்தை அன்றைக்கு நம் கண் பார்க்கும். என்றைக்கு? இன்று நம்மால் பார்க்க முடியாமல் இருப்பதும், என்றும் புறக்கண்ணால் பார்க்க முடியாத அந்த உருவத்தை உணர்வுபூர்வமாக உனக்கு உள்ளே இருக்கும் அகக்கண்ணால் பார்க்க முடியும்.

ஆலயத்துக்குச் சென்று பகவானை வழிபடும்போது சற்று நேரம் கண்ணை மூடிக் கொள்கிறோமே அது இதற்குத்தான் என்று தோன்றுகிறது. புறக்கண்ணால் விக்கிரகமாகவோ சிலையாகவோ பார்த்த வடிவமல்ல அந்த வடிவம். உணர்வுபூர்வமாக உள்ளத்துள் தெரியும் ஓர் உருவம். 'உள்ளத்தில் உள்ளான் என்று ஓர்' (நினைத்துக் கொள்) என்று மற்றொரு பாசுரத்தில் சொல்லியிருக்கிறார்.

அதுதான் அவன் உண்மையான உருவம். இவ்வாறு உள்ளத்தில் உணர முடிகிறவர்களுக்கு நாளடைவில் உருவ வழிபாடு தேவையற்றுப்போகும். பாட்டை மறுபடி பாருங்கள். ●

சுஜாதா

# 48

# கடவுளுக்கு உருவம் உண்டா?




## வாரம் ஒரு பாசுரம்

★ அ.ஷண்முகசுந்தரம், பெங்களூர்

***நிறைய சீனிவாசன்களைப் பற்றி நினைவுகூர்ந்த கிரேஸி, 'என்னை மறந்தது ஏன்?' என்று திருப்பதி சீனிவாசர் ஒருநாள் துளஸி தீர்த்தம் மட்டும் அருந்தி உபவாசம் இருந்தாராமே... பிராயச்சித்தம் செய்து விட்டீரா..?***

திருப்பதி சீனிவாசரை நான் மறந் தாலும், ஞாபகம் வைத்துக் கொண்டிருந் தாலும் அவருக்கு ஒரு நஷ்டமுமில்லை... அவர் ஞாபகத்தில் நான் இருப்பதுதான் எனக்கு லாபம்... உபவாசம் இருந்த காரணம்... கொஞ்சவீரிங் அறிவு உள்ள எனக்கு இன்ஜினீயரிங் கற்றுக்கொடுத்த கிண்டி பொறியியல் கல்லூரிப் பேராசிரியர் ஏ.எம்.சீனிவாசனையும், சுந்தரம் கிளேட் டனில் எனக்கு வேலையும் போட்டுக் கொடுத்துச் சுளையாகச் சம்பளமும், போனசும் அளித்த அதன் நிர்வாக இயக்கு னர் வேணு சீனிவாசனையும் நான் மறந்தது தான்... இந்த இரு சீனிவாசன்களிடமும் நான் திருப்பதி சீனிவாசர் வாங்கிய கடனைவிட அதிகமாகவே நன்றிக் கடன் பட்டுள்ளேன். அப்பாடா... பிராயச்சித்தம் செய்தாகிவிட்டது. இனி திருப்பதி கோவிந் தன் குறையொன்றுமில்லை என்றிருக்க லாம்.

★ பி.சிவா, பாளையங்கோட்டை

***அதிர்ஷ்டம் ஒருமுறைதான் கதவைத் தட்டுமா..?***

ஒருமுறை கதவைத் தட்டும். அடுத்த முறை காலிங் பெல் அடிக்கும். இறுதியாக E-mail., S.M.S. கூட கொடுத்துப் பார்க்கும். இத்தனையும் மீறி நாம் தூங்கிக் கொண்டி ருந்தால், 'தூர அதிர்ஷ்டம்' ஓடிவிடும்... 'துரதிருஷ்டம்' கதவை உடைத்துக் கொண்டு உள்ளே நுழைந்து விடும்.

★ மு.ரா.பாலாஜி, கோலார் தங்கவயல்

***ஹலோ கிரேஸி... பூஜை புனஸ்காரம் என்கிறார்களே... பூஜை சரி... அது என்ன புனஸ்காரம்?***

செய்வது பூஜை... பூஜைக்குப் பிறகு திரும்பத்திரும்பச் செய்வது புனஸ்காரம். 108 தடவையோ, 1008 தடவையோ சொல் லப்படும் மந்திர ஜபம். இன்னும் விலா வாரியாக உதாரணத்தோடு சொல்ல வேண்டுமென்றால் திருமணத்தை பூஜை என்று வைத்துக்கொண்டால், First Night-ல் ஆரம்பித்து ஆயுசு வரை ஒவ்வொரு இரவிலும் மனைவி சொல்லும் தலை யணை மந்திரம் புனஸ்காரம். ஒரு வித்தி யாசம்... மந்திர ஜபம் நாமே சொல்வது. இனிமையானது; தலையணை மந்திரம் மனைவி சொல்ல, நாம் தலை ஆட்டிய படிக் கேட்பது - காரசாரமான புனஸ்காரம்.

★ வே.ந.கதிர்வேல், வேலூர்

***சங்கரதாஸ் சுவாமிகள் நாடகத் தந்தை. ஆர்.எஸ்.மனோகர் நாடகக் காவலர். கிரேஸி மோகன்?***

அவர்கள் இருவரும் கட்டிய மாளிகை யில் ஒண்டுக்குடித்தனம் செய்யும் 'நாடக Neighbour'.

★ ஜே.வி.ஜே. கண்ணன், திருச்சி

***சித்திரவதை என்றால் என்னவென்று சொல்லுங்களேன்?***

வீதிக்கு அழகுக் கூட்ட, அதிகாலையில் வீட்டு வாசலைக் கூட்டி பெண்கள் சித்திர மாகப் போடும் அழகிய கோலங்களை, காரோ, ஸ்கூட்டரோ, தான்தோன்றித்தன மாக நடப்பவரோ அழித்து அலங்கோல மாக்குவதைப் பார்க்கையில் எனக்குச் சித்திரவதையாக இருக்கும்.

## கிரேஸியைக் கேளுங்கள்

# முருகனுக்கு சிவன் கொடுத்த

★ அ.முரளீதரன், மதுரை

***பள்ளி ஆசிரியர், பத்திரிகை ஆசிரியர்... என்ன வேறுபாடு?***

இருவரும் படும்பாட்டில்தான் வேறுபாடு. தப்பு செய்தால் நம்மைத் திருத்த அடிப்பார் பள்ளி ஆசிரியர். நாம் எழுதியதில் தவறு இருந்தால் அதை அடித்துத் திருத்துவார் பத்திரிகை ஆசிரியர். தலையெழுத்தை மாற்றுபவர் பள்ளி ஆசிரியர். கலை எழுத்தைக் கற்றுத் தருபவர் பத்திரிகை ஆசிரியர்.

★ கௌசல்யா, அரக்கோணம்

***அன்னபூரணியின் அட்சய பாத்திரமும், அலாவுதீனின் அற்புத விளக்கும் உங்களுக்குக் கிடைத்தால் முதல் காரியமாக என்ன செய்வீர்கள்..?***

அற்புத விளக்கைத் தேய்த்து பூதத்தை வரவழைப்பேன். வந்த பூதத்திடம் அட்சய பாத்திரத்தைக் கொடுத்துச் சுத்தமாகத் தேய்க்கச் சொல்லுவேன்... சுத்தம்தானே சோறு போடும்...

# மாம்பழம்!

★ குலசை க.மீ.நஜ்முதீன், காயல்பட்டினம்

***கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தால்...?***

என்னதான் தெய்வமாக இருந்தாலும், இப்போது உள்ள டிராஃபிக்கில் குறுக்கே வந்தால் ஆக்ஸிடென்டிலிருந்து தப்ப முடியாது. அடிபட்டுக் கிடக்கும் தெய்வத்தைக் கும்பிடப் போனவர்கள் சுற்றி நின்று 'அடக் கடவுளே' என்று அங்கலாய்ப்பார்கள்.

★ த.சத்தியநாராயணன், அயன்புரம்

***சிவபெருமான் மாம்பழத்தை முருகனுக்குக் கொடுத்திருந்தால்..?***

சிவபெருமான் (கனிவாக): 'கந்தா மாம்பழம் இந்தா'...

முருகன் (குறும்பாக): 'இது சுட்ட பழமா...? இல்லை சுடாத பழமா...?'

சிவபெருமான் (கோபமாக): 'முருகா, நீ விளையாட நான் ஔவையாரல்ல... உன் தந்தையார்... என்று கூறி நெற்றிக் கண்ணைத் திறக்க, அந்தச் சூட்டில் மாம்பழம் சுட்ட பழமாகிச் சாம்பலாகும். மகனுக்காகப் பரிந்து தாய் பார்வதி வேண்டிக் கொள்ள, சாந்தமான சிவன் - ''உமையவளே... பூவுலகில் பிள்ளைபெறும் எல்லா தாய்மார்களும் மசக்கைக்காக மாங்காயும், சாம்பலும் சாப்பிடுவார்கள் என்பதை உணர்த்தவே யாம் இந்தத் திருவிளையாடலைப் புரிந்தோம்'' என்று பகர்வார். ●



தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** தன்னம்பிக்கை மிகுந்து காணப்படும். பூர்வீகச் சொத்துகள் வந்துசேரும். கல்வி வளம் மேலோங்கும். திருமணக் காரியம் தடங்கல் இன்றி நிறைவேறும். நெருங்கிய நண்பர்களை விட்டுப் பிரிய நேரிடும். உடல் நிலை சற்று சீராகும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**ரிஷபம்:** தொழில் துறையில் இடமாற்றம் உண்டாகும். புதிய வியாபார முயற்சி கைகொடுக்கும். குழந்தைகளால் மன சந்தோஷம் கிட்டும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சொத்துகள் வாங்க நல்ல காலம். வேலைப்பளு அதிகரிக்கும். நீண்ட கால கனவுகள் நிறைவேறும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வந்தால் நல்ல பலனை அடையலாம்.

**மிதுனம்:** தெய்வ அனுகூலத்தால் எதையும் சாதிப்பீர்கள். புண்ணிய ஸ்தலம் சென்று மகானைச் சந்திப்பீர்கள். கணவன் - மனைவிக்குள் அன்பு பெருகும். வழக்கு வெற்றி அளிக்கும். வியாபாரத்தில் முற்போக்கான சூழ்நிலை காணப்படும். குரு வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**கடகம்:** எதிலும் நிதானத்துடன் செயல்படுவது நற்பலனை அளிக்கும். சுபச் செலவுகள் ரெடி. தம்பதியினர் ஒருவருக்கொருவர் அனுசரித்துப் போவது நல்லது. வேலையில் சிரமங்கள் இருக்கும். அவசரபட்டு வேறு வேலைக்குத் தாவக் கூடாது. பிள்ளைகளால் நற்பலன் உண்டாகும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வந்தால் சங்கடங்கள் விலகும்.

**சிம்மம்:** திடீர் பிரயாணங்கள் வந்து சேரும். சுபகாரிய பிரார்த்தனைகள் நிறைவேறும். நிதி நிலைமை சீராகும். வேலையில் மாற்றம் கிட்டும். நீண்டகால கடன் தொல்லை தீரும். திருமணம் தடை விலகிக் கைகூடும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். ராகு / கேது / குரு/ சனி வழிபாடு செய்து வருதல் நன்மையளிக்கும்.

**கன்னி:** மனச்சலனம் விலகும். அனாவசியமான செலவுகள் ஏற்படும். கால் பகுதியில் அதிக கவனம் செலுத்தவும். வழக்கு வெற்றி பெறும். கடன் சுமை விலகும். இடமாற்றம் ஏற்படும். வேலைப் பளு அதிகரிக்கும். தந்தையின் உடல்நிலை பாதிக்கும். வராத நிலுவை வசூலாகும். வெளியூர்ப் பயணம் வந்து சேரும். சனி / குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**துலாம்:** திருமணக் காரியம் கைகூடும். வாக்கு வன்மை மேலோங்கும். கல்வி வளம் சிறப்படையும். தொழில் மூலம் ஆதாயம் ஏற்படும். கடன் தொல்லை நீங்கும். புதிய வியாபாரம் நற்பலனை அளிக்கும். கூட்டாளிகளை விட்டுப் பிரிய நேரிடும். பூர்வீகச் சொத்துகள் பாகப்பிரிவினை ஆகும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். வீடு / மனை வாங்க நல்ல




# நடக்குமென்பார்;

தருணம். ராகு / கேது வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**விருச்சிகம்:** நல்ல யோகமான வாரம். வெளியூர்ப் பயணம் வந்து சேரும். தொழில் மூலம் நல்ல ஆதாயம் ஏற்படும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். எதிர்ப்புத் தொல்லை விலகும். கல்வி வளம் மேலோங்கும். திருமணம் தடை விலகி நடக்கும். பொறுப்பான பதவி உயர்வு வரும். பணக்கஷ்டம் இருக்காது. ராகு / கேது / சனி / குரு வழிபாடு செய்து வருதல் நற்பலன் தரும்.

**தனுசு:** வெளிநாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். திருமணம் கைகூடும். தந்தையின் உடல் நிலை பாதிக்கும். மறைமுக எதிர்ப்புகள் விலகும். சாதுக்கள் தரிசனம் கிட்டும். வழக்கு வெற்றி அளிக்கும். குரு வழிபாடு செய்து வந்தால் நற்பலன் பெருகும்.

**மகரம்:** உடல்நலத்தில் கவனம் தேவை. கணவன் - மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நற்பலனை அளிக்கும். யாரிடமும் வாக்குவாதம் தவிர்க்கவும். வேலைப்பளு அதிகரிக்கும். கூட்டாளிகள் விலகிச் செல்வார்கள். கொடுக்கல், வாங்கலில் கவனம் தேவை. வியாபாரத்தில் போட்டி, பொறாமை இருக்கும். திருமணம் கைகூடும். வழக்கு இழுபறி ஆகும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

## பரத்வாஜ் பதில்கள்!

● என் மகனின் எதிர்காலம் எப்படி இருக்கும்?

– ஜி.வீரராகவன், திருச்சி

உங்கள் மகனுக்கு 16.11.2007-க்குப் பிறகு திருமணம் கைகூடும். தொழில் வளம் மேலோங்கும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்துவர கஷ்டங்கள் விலகி, நற்பலன் உண்டாகும். அரசு வேலை கிடையாது. தனியார் துறையில் நல்ல வேலை அமையும்.

● என் மகளுக்கு எப்போது திருமணம்?

– ஜானகி, திருவாரூர்

தனியார் துறையில் வேலை பார்க்கும் மணமகன் இன்னும் ஆறு மாதத்தில் அமைவார். பரிகாரம் தேவையில்லை.

**கும்பம்:** வேலை மாற்றம் உண்டாகும். திருமண முயற்சிகள் கைகூடும். கொடுக்கல், வாங்கல் சிக்கல் தீரும். வராத நிலுவைகள் வந்து சேரும். கடன் தொல்லை தீரும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. குழந்தைகள் மனமகிழ்ச்சி ஏற்படும். வீடு / மனை வாங்கும் யோகம் கிட்டும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்து வர நற்பலனை அளிக்கும்.

**மீனம்:** வெளியூர்ப் பிரயாணம் செல்ல நேரிடும். பண வருவாய் பெருகும். மனச்சலனம் தீரும். பதவி உயர்வு கிட்டும். வீடு மாற்றம் ஏற்படும். அந்நிய நாட்டு அழைப்பு கிட்டும். புதிய முயற்சி வெற்றி அளிக்கும். பரிகாரம் தேவையில்லை.



# நடக்கும்!

**9.9.07 முதல் 15.9.07 வரை**

அவளது கண்கள் நன்கு சிவந்திருந்தன.

சில மணி நேரத்துக்கு முன்பு அவளைப் பார்க்கையில் புது மணப்பெண் வெட்கத்தில் கன்னங்கள் இரண்டிலும் சிவப்பேறியிருந்தது. அந்தச் சிவப்பெல்லாம் இப்போது கண்களுக்குச் சென்றுவிட்டாற் போலிருந்தது.

நிச்சயமாக அழுதிருக்கிறாள். அதுவும் பிழியப்பிழிய. ஏன் என்று ஊகிப்பது அத்தனை சிரமம் இல்லை.

''பாவம்'' என்றாள் சங்கீதா. ''அவளைப் பார்க்கும்போது எனக்கு நம்ம கல்யாண நாள்தான் ஞாபகத்துக்கு வருது.''

''நீ அழுதியா என்ன?'' ஆர்வமில்லாமல் கேட்டேன். ''எனக்கு ஞாபகமில்லை.''

''நீங்க எதைத்தான் கவனிச்சீங்க.'' அலட்சிய தோரணையில் சொன்னாள் அவள். ''என்னோட கல்யாணப் புடைவை கலர் கேட்டாக்கூட ஞாபகம் இல்லைன்னு தான் சொல்லுவீங்க.''

அவளுடைய குற்றச்சாட்டைக் கவனிக்கிற நிலைமையில் நான் இல்லை. என் கவனம் முழுவதும் புது மணப்பெண் ராதிகா மீது படிந்திருந்தது.

எத்தனை உற்சாகமான பெண் அவள். ஒரு விநாடியேனும் அவள் முகத்திலிருந்து அந்தக் குழந்தைச் சிரிப்பைக் காணாமல் போக்கவிட முடியுமா? தன்னைச் சுற்றிலும் ஒரு மகிழ்ச்சி அலையை எந்நேரமும் தவழவிட்டுக் கொண்டிருந்தவளை, ஒரு திருமணம் அசைத்து அழவைத்துவிட்டதே!

எனக்கு இந்தக் கேள்விகளுக்கெல்லாம் பதில் தெரியவில்லை. கேள்விகள் நியாயமானவைதானா என்பதுகூடப் புரியவில்லை. ஆனால், ராதிகாவின் சிவந்த கண்கள் என்னை என்னவோ செய்தன.

திருமணத்துக்குச் சில தினங்களுக்கு முன்பாகவே ராதிகாவுக்குப் பெங்களூரிலிருந்து மாற்றலாகிவிட்டது. அங்கே அவள் தோழிகளோடு தங்கியிருந்த வீட்டைக் காலிசெய்துவிட்டு எங்களிடம் விடைபெற்றுக் கொண்டுதான் கிளம்பினாள்.

அப்போதே எல்லாம் முடிவாகிவிட்டது. இனிமேல் அவளுடைய வாழ்க்கை வேறு. அதில் நாங்கள் பக்கத்து வீட்டுக்காரர்களாக ஒருபோதும் இணைந்து கொள்ள முடியாது.

# அழுத விழிகள்!

**என். சொக்கன்**

சுமார் இரண்டு வருடங்களுக்கு முன்பு ராதிகாவை முதல்முறை சந்தித்த நாள் சற்றே மங்கலாகத்தான் நினைவில் இருக்கிறது. ''என் பேர் ராதிகா. நானும் என்னோட ஃப்ரெண்ட்ஸ் மூணு பேரும் பக்கத்து வீட்டுக்குக் குடிவந்திருக்கோம். நீங்க தமிழ் ஃபேமிலின்னு சொன்னாங்க. அதான் தைரியமா கதவைத் தட்டிட்டேன். தப்பாயிருந்தா ஸாரி'' என்று படபட வென்று நிறுத்தாமல் பேசிக் கொண்டே போனாள்.

அதன் பிறகு ராதிகா எங்கள் வீட்டில் நேரத்தைச் செலவிட்டதுதான் அதிகம். இரண்டே நாட்களில் டி.வி. ரிமோட் அதிகாரத்தைப் பறித்துக்கொண்டாள். அடுத்த ஒரு வாரத்துக்குள் ''என்ன எப்பப் பார்த்தாலும் எதையாவது படிச்சுக் கிட்டே இருக்கீங்க?'' என்று என்னுடைய



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை

கையிலிருந்த புத்தகத்தைப் பிடுங்குகிற அளவுக்கு உரிமை கூடிவிட்டது.

இன்னொருவராக இருந்தால், ''உன் வேலையைப் பார்த்துக்கிட்டுப் போ'' என்று ஆங்கிலத்தில் கோபப்பட்டிருப்பேன். ராதிகாவிடம் அது முடியாது.

இருவர் மட்டுமே வாழும் எங்கள் சிறுவீட்டில் ஒரு வளர்ந்த குழந்தையைப் போல் வலம் வரத் தொடங்கினாள் ராதிகா. அதனால்தானோ என்னவோ, எனக்கும் சங்கீதாவுக்கும் அவள் மீது இனம்புரியாத ஒரு பாசம் பொங்குவதை உணர்ந்தோம்.

நான்கு மாதங்கள் கழித்து அவள் தீபாவளி விடுமுறைக்கு ஊருக்குச் சென்றபோது, வீடு வெறிச்சிட்டுக் கிடந்தது.

மறுநாள், மாலை நேரத் தேநீரின்போது இயல்பற்ற ஒரு மௌனம் கவிந்து கிடந்தது. நெடுநேரத்துக்குப் பிறகு ''ராதிகாவைப் பத்தி நீங்க என்ன நினைக்கிறீங்க?'' என்றாள் சங்கீதா.

எனக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை. ராதிகாவின் பிரிவு எங்கள் இருவரையும் இப்படிக்



**“ராதிகாவை யாருக்கேனும் பிடிக்காமல் போகுமா?”**

கடுமையாகப் பாதிக்கும் என்று நினைத்திருக்கவில்லைதான்.

நான்கு நாட்களுக்குப்பிறகு மூட்டை பட்சணங்களோடு திரும்பினாள் ராதிகா. அப்போதுதான் எங்கள் வீட்டில் பட்டாசும் மத்தாப்புமாகக் களைகட்டியது.

முதன்முதலாக அவளுக்குப் பதவி உயர்வு கிடைத்த நாளன்று யாரிடமும் விஷயத்தைச் சொல்லாமல், நேராக எங்கள் வீட்டுக்குத்தான் வந்தாள். ''சமத்துப் பொண்ணு ப்ரமோஷன் வாங்கியிருக்கு. ஒரு ஸ்வீட் செஞ்சுத் தரமாட்டீங்களா?'' என்று அதிகாரமாகக் கேட்டு வாங்கிக் கொண்டாள்.

அதன்பிறகு அவளுக்கு வேலை நெருக்கடி அதிகரித்துவிட்டது. ராத்திரி எத்தனை மணிக்குத் திரும்புகிறாள். காலையில் எப்போது மீண்டும் அலுவலகம் செல்கிறாள் என்பதெல்லாம் யாருக்கும் தெரியாத ரகசியமாக இருந்தது.

ராதிகாவை நாங்கள் சந்தித்துச் சுமார் ஒன்றரை வருடங்கள் கழிந்திருந்தபோது, அவளுக்கு மாப்பிள்ளை பார்க்கத் தொடங்கினார்கள். இந்தச் செய்தியை எங்களிடம் சொல்லிவிட்டு, ''எனக்கு இதை எப்படி ஃபேஸ் பண்றதுன்னு தெரியலை. உங்க ஹெல்ப் வேணும்'' என்றாள். சில விநாடிகளுக்குப் பிறகு ''யு நோ. ஐ யாம் ஜஸ்ட் ட்வென்ட்டி டு'' என்று சங்கடமாகச் சிரித்தாள்.

**ரா**திகாவுக்கு அவர்கள் வீட்டில் முதன்முதலாகப் பார்த்த மாப்பிள்ளை பெங்களூரைச் சேர்ந்தவராக அமைந்துவிட்டார். ஆகவே, எங்கள் வீட்டில்தான் அவளுடைய 'முதல்' பெண் பார்க்கும் படலம் அரங்கேறியது.

அன்றைய தினம் முழுவதும் ராதிகா ஏனோ சிரித்துக்கொண்டே இருந்தாள். சந்தோஷச் சிரிப்பு அல்ல. கேலிச் சிரிப்பு. அவளுக்கு 'உடுத்திவிடப்பட்டிருந்த' சேலையில் தொடங்கி, மாப்பிள்ளையின் கிருதா வரை எல்லாவற்றையும் கிண்டலடித்துச் சிரித்துக் கொண்டிருந்தாள்.

அந்த மாப்பிள்ளைக்கு ராதிகாவைப் பிடிக்கவில்லை. 'போய் கடிதாசி போடுறோம்' என்றெல்லாம் நீட்டி முழக்காமல், நாசூக்காக விஷயத்தை உடைத்துச் சொல்லிவிட்டுத்தான் கிளம்பினார்கள்.

ராதிகாவைப் போய் யாருக்கேனும் பிடிக்காமல் போகுமா? எனக்கு ஆச்சர்யம் தாங்கவில்லை.

அதன்பிறகு, வேறு நான்கைந்து வரன்கள் வந்தன. எதுவும் சரிப்படவில்லை.

''எல்லாம் நல்லதுக்குதாங்க'' என்ற சங்கீதா, ராதிகாவின் கன்னத்தைக் கிள்ளி, ''நீ இன்னும் கொஞ்சநாள் எங்களோட இருக்கணும்னு உன் தலையில எழுதியிருக்குடீ'' என்றாள்.

அன்று இரவு, ''மனசளவில் ராதிகா இன்னும் கல்யாணத்துக்குத் தயாரில்லைன்னு தோணுது'' என்றேன் சங்கீதாவிடம்.

''அதை நாம சொல்லக்கூடாதுங்க'' என்றாள் சங்கீதா.

**எ**ந்தக் கடவுள் கண் திறந்தாரோ... அடுத்த வாரமே திருச்சி பக்கத்தில் ஒரு குக்கிராமத்திலிருந்து வந்த சம்பந்தம் முடிவாகிவிட்டது. பையன் அமெரிக்காவில் வேலை பார்க்கிறான்.



**சாதா படம் இல்லே!**

“**நா**ன் எங்கேயும் போயிட மாட்டேன். இதோ 'வேதா' மூலமா புதியவனாக உங்களைச் சந்திக்க வர்றேன்'' என்கிறார் அருண் விஜய்.

"இப்படித்தான் சொல்கிறீர்கள்... ஆனால், ஒவ்வொரு படமும் வேறு மாதிரியாக உங்களுக்கு அமைந்து விடுகின்றதே..." என்றால் மறுக்கிறார்.

''ஆனா, 'வேதா' படம் அப்படி இல்லே. உறவுகளுக்கும் உணர்வுகளுக்கும் இடையே

**ராதிகாவின் அழுத கண்களைத் தவிர்க்க முடியாமல் நேருக்குநேர் சந்தித்துவிட்டேன்**



முக்கால் மாத விடுமுறையில் வந்திருக்கிறான். அதற்குள் திருமணத்தை முடித்துவிட வேண்டும்.

மகிழ்ச்சியான நேரங்களிலெல்லாம் எனக்குள் ஏதோ ஒரு மணல் துகள் மாட்டிக் கொள்ளும். 'தனது திருமணம் நிச்சயமாகியிருப்பதைச் சொன்னபோது ராதிகாவின் குரலில் கொஞ்சம்கூட உற்சாகம் தெரியவில்லையே' என்று குழம்பித் திரிந்தேன்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு, அவளை நேரில் பார்த்தபோது அந்தக் குழப்பம் மேலும் அதிகரித்துவிட்டது. வழக்கமான துள்ளல் அவளிடம் குறைந்திருந்தது. அவள் ஏதோ திருவிழாவில் தொலைந்துவிட்ட குழந்தைபோல் அபத்திரமாக விழித்துக் கொண்டிருந்தாள்.

''ப்ளீஸ், அநாவசியமாக் கண்டதையும் கற்பனை செஞ்சுக்காதீங்க. புருஷனோட மனசால, உடம்பால நெருங்கினப்புறம், எல்லாக் கவலையும் தீர்ந்துடும். பழைய படி உற்சாகமாகிடுவா''என்றாள் சங்கீதா.

அவள் சொல்வது நிஜமாக இருக்கலாம். ஆனால், அதைப் பார்க்கவோ, உறுதி செய்து கொள்ளவோ, நானும் சங்கீதாவும் அமெரிக்காவில் இருக்கப்போவதல்லை.

**ரா**திகாவின் திருமணம் திருச்சியில் இனிதே நடந்து முடிந்திருந்தது.

மாலை ரயிலில் அவள் சென்னை போகிறாள். அங்கிருந்து அமெரிக்கா. மீண்டும் நாங்கள் அவளைச் சந்திக்க எத்தனை வருடங்களாகுமோ... தெரியாது.

ராதிகா அவளுடைய பெற்றோர், கணவன், மாப்பிள்ளை வீட்டார் என்று கல்யாண கும்பல் பிளாட்ஃபாரத்தின் பெரும்பகுதியை ஆக்கிரமித்திருந்தது. அவர்களுக்குச் சற்றுத் தள்ளி ஹிக்கின் பாதம்ஸ் கடைக்கு அருகேயிருந்த பெஞ்சில் நானும் சங்கீதாவும் பெங்களூர் ரயிலுக்காக அமர்ந்திருந்தோம். என்னால்தான் ராதிகாவின் அழுத விழிகளைத் தாங்க முடியவில்லை. அவள் கணவனும், காலமும் எங்களிடமிருந்து ஒரு பகுதியை வலுக்கட்டாயமாகப் பிரித்துக் கொண்டுபோவதுபோல் உணர்ந்தேன்.

''உங்களுக்கு ஏம்ப்பா நல்லதே தோணமாட்டேங்குது?'' என்றாள் சங்கீதா. சில விநாடிகளுக்குப் பிறகு ''அவளுக்கு ஒண்ணும் இல்லைங்க. ஷீ ஈஸ் ஆல்ரைட்''என்றாள் உறுதியாக.

''ஷ்யூர்'' என்றேன் நான்.

தூரத்தில் ரயில் வருகிற ஓசை கேட்டது. அதைப் பார்க்கத் திரும்பியபோது ராதிகாவின் அழுத கண்களைத் தவிர்க்க முடியாமல் நேருக்கு நேர் சந்தித்துவிட்டேன். அப்போது அவளுடைய முகத்தில் ஓர் இதமான சின்னப் புன்னகை பரவினாற்போலிருந்தது. ●

நடைபெறும் போராட்டம்தான் 'வேதா'கதை. எதையும் விட்டுக் கொடுக்கலாம்னு சொல்லுவாங்க. ஆனா எதை விட்டுக் கொடுக்க முடியுமோ அதைத்தான் விட்டுக் கொடுக்க முடியும். எல்லாத்தையும் விட்டுக் கொடுத்துட்டா நீங்க காணாமலே போய்டுவீங்க. இதை வலியுறுத்துறா மாதிரிதான் 'வேதா' கதை அமைஞ்சிருக்கும். ஒரு சில படங்கள் நான் நடிச்சு சரியாப் போகலங்கறதுக்காக எல்லாப் படத்தையும் ஒரே மாதிரி நினைக்காதீங்க. வேதா, சாதா படம் இல்ல... சாதிக்கப்போற படம்'' என்கிறார் அழுத்தமாக.

**- சித்ரஞ்சன்**

**1950**-ஆம் ஆண்டு நடந்த பிரேஸில் உலகக்கோப்பை போட்டியில் 'ஷூ' அணிந்துதான் ஆட வேண்டும் என்று கூறப்பட்டது. அதற்குப் பழக்கமில்லாத இந்தியக் கால்பந்து அணி ஓர் ஆட்டம்கூட ஆடமுடியாமல் வெளியேறியது. 1948 முதல் 1960 வரைக்கும் நடந்த நான்கு ஒலிம்பிக் போட்டிகளிலும் பங்கேற்க இந்திய அணி தகுதி பெற்றது. விசேஷமாக 1956 மெல்போர்ன் ஒலிம்பிக் போட்டியில் நான்காவது இடம் கிடைத்தது.

பிறகுதான் ஏழரை பிடிக்க ஆரம்பித்தது. துக்கடா நாடுகள் பங்கேற்கும் போட்டிகளில்கூட ஜெயிக்க வலு இல்லாமல் இந்தியக் கால்பந்து அணி திண்டாட ஆரம்பித்து. ஆதாரம் - கடந்த நாற்பது வருடங்களில் இந்தியக் கால்பந்து அணி வென்றது நான்கு கோப்பைகளை மட்டுமே. சமீபத்தில் சர்வதேச அளவில் இந்தியா நடத்திய நேரு கோப்பை கால் பந்தாட்டப் போட்டியில் கோப்பையை இந்திய அணி வென்றதன் காரணமாக வெற்றிடம் நிரப்பப்பட்டுள்ளது.




* மைதானத்தில் மோதும் வீரர்கள்

# புதுவாழ்வு பெறும்

அவமானம், வெட்கம், கேவலம், துர்பாக்கியம், இப்படியாக எப்படி வேண்டுமானாலும் இந்தியக் கால்பந்தாட்டத்தைச் சபிக்கலாம். ஏனெனில், இந்தியாவில் கால்பந்து திறமைகள் மக்கி மடிந்து பலகாலங்கள் ஆகிவிட்டன. தெருவோரம் கிடைக்கும் குப்பையைக் கண்டால் எப்படி ஒதுங்கிச் செல்வோர்களோ அதுபோலவே இந்தியக் கால்பந்தாட்டத்தை எல்லோரும் ஒரு சாக்கடைக்குச் சமமாகவே எண்ணினர். ஸ்டீரீட் கிரிக்கெட் பிரபலமானது போல ஸ்டிரீட் ஃபுட்பால் இளைஞர்கள் வசமாகாதது கால்பந்தாட்டத்துக்கு ஏற்பட்ட பெரிய இழப்பு.



* பாப் ஹூட்டன்

கிரிக்கெட் பார்க்கும் வர்க்கத்தினர் எல்லோரும் பசையுள்ள ஆட்கள். ஆயிரம் ரூபாய்க்கு டிக்கெட் விற்றால்கூட சேப்பாக்கம் மைதானம் ஒரு மணி நேரத்தில் நிரம்பிவிடும். கால்பந்து ரசிகர்கள் வேறுரகம். அத்தனை பேரும் அடித்தட்டு மக்கள். மேலும், கால்பந்தாட்ட வீரர்கள் சபிக்கப்பட்டவர்கள். வருடம் முழுக்க ஆடினாலும் அவர்களுடைய வருமானம் பத்து லட்சத்தை எட்டாது. ரஞ்சி கிரிக்கெட் வீரர்கள் அநாயசமாக வருடத்துக்கு முப்பது லட்சம் சம்பாதிக்கிறார்கள். கால்பந்தில் இந்தியக் கேப்டன் பவுசிங் பூட்டியா போன்ற நீண்ட அனுபவம் கொண்ட வீரர்களுக்கு மட்டுமே லட்சங்கள் சாத்தியமாகின்றன. மேலைநாடுகளைப் பார்த்து ஆடை

யணிகிறோம். ஷூஸ் மாட்டிக் கொள்கிறோம். ஆனால், பாடங்களைக் கற்றுக் கொள்வதில்லை. வெளிநாடுகளிலுள்ள தனியார் கிளப்புகள் ஊர்ஊராக, கிராம கிராமமாக, திறமைகளைத் தேடி அலைகிறார்கள். வலையில் மாட்டும் சிறுவனுக்குப் படிப்பு, கல்வி, இருப்பிடம் ஆகியவை இலவசமாக வழங்கப்படுகின்றன. இந்தியாவில்? நிகழ்காலம் கண்முன்னால் களவாடப்படுவதால், எதிர்காலம் மீதான நம்பிக்கை இல்லாமல் கால்பந்து வீரர்கள், இறுதியாக அரசு அலுவலகங்களில் குமாஸ்தா பணியில் அமர்ந்து கொள்கிறார்கள்.

இத்தனையையும் மீறி நேரு கோப்பையை இந்திய அணி வென்றதற்கு, அணியின் இங்கிலாந்து பயிற்சியாளர் பாப் ஹூட்டன் மட்டுமே காரணம். தனது பேருழைப்பாலும் அர்ப்பணிப்பாலும், தொடமுடியாத ஒரு சாதனையை நிகழ்த்திக் காட்டியிருக்கிறார். இந்தியக் கால்பந்தின் பயிற்சியாளராகப் பொறுப்பேற்றவுடன் பழங்குடித் தன்மை வாய்ந்த ஆட்டமுறைகளையெல்லாம் முதல் வேலையாகத் தூக்கி எறிந்தார். மைதானத்தை ஒரு கொண்டாட்ட களமாக எண்ணுங்கள் என்று வீரர்களுக்குப் புதிய அறிவுரைகளை ஊட்டினார்.

இந்தியக் கால்பந்தாட்டத்தின் வளர்ச்சியில் வடகிழக்கு மாநிலங்களின் பங்களிப்பு பாராட்டும்படி உள்ளது. மிசோராம், மணிப்பூர், நாகாலாந்து போன்ற மாநிலங்

**ச.ந. கண்ணன்**

களைச் சார்ந்தவர்கள் இந்தியக் கிரிக்கெட் அணிக்குத் தேர்வாவதை கனவிலும் நினைக்க முடியுமா? ஆனால், பலவீனமான வட கிழக்குப் பிரதேசத்திலிருந்து அரை டஜன் வீரர்கள் கால்பந்து அணியில் இடம் பிடித்திருக்கின்றனர்.

இந்த முறை கால்பந்தாட்டத்துக்கு நிறைய கவனம் கிடைத்திருக்கிறது. இந்தியா ஆடிய மேட்சுகளின்போது ஸ்டேடியம் நிரம்பித் தளும்பியது. கோப்பையை வென்றது குறித்து முன்னணி அரசியல்வாதிகள் பாராட்டுத் தெரிவித்திருக்கிறார்கள். வீரர்களுக்கு ஊக்கப் பரிசுகள் அறிவிக்கப்பட்டுள்ளன. டி.டி.யில் மேட்ச் லைவ் ஆகக் காண்பிக்கப்பட்டது. ரசிகர்களையும், அரசியல்வாதிகளையும், மீடியாவையும் இதுபோல தொடர்ந்து மயக்கத்தில் வைத்திருக்க இந்தியக் கால்பந்தாட்டம் இன்னமும் நிறைய பந்தாடிப் பார்க்க வேண்டும்.

* நேரு கோப்பையைக் கைப்பற்றிய களிப்பில்...



# கால்பந்து!

# முரட்டு உடம்பு; குழந்தை மனசு!

நல்ல உயரம். வாட்டசாட்டமான, எதிரே இருப்பவர் மிரளும்படியான தோற்றம். ஆனால், கிட்டே நெருங்கிப் பேச ஆரம்பித்தால், குழந்தையிடம் உறையாடுவதுபோல் இருக்கிறது ஃபைட்டர் ராஜசேகரிடம் பேசும்போது.

''எங்க இயல்பே இது தாங்க. பார்க்கத்தான் ஆளு முரடன் மாதிரி இருப்போம். பழகினாத்தான் தெரியும் நாங்களும் சாதாரண மனுஷங்க தான்னு'' என்று சிரிக்கிறார்.

''சின்ன வயசுலயே எனக்குச் சண்டைன்னா ரொம்ப விருப்பம். காரணம் புரூஸ்லீ. சாப்பிட மறந்தாலும் மறப்பேன்; அவரோட படங்களைப் பார்க்க மறக்க மாட்டேன். இந்த ஞாபகமாவே சுத்திக்கிட்டிருந்ததால படிப்பு மண்டைல ஏறல. பத்தாவது ஃபெயில் ஆயிட்டேன். ஏற்கெனவே களரி க்ளாஸுக்குப் போயிட்டிருந்ததால, என் கவனம் அடுத்து அதுல திரும்புச்சு. அங்கே எனக்குக் கிடைச்ச நண்பர்களோட அப்பாக்கள் ஸ்டண்ட் யூனியன்ல இருந்தாங்க. அவங்க வீட்டுக்குப் போகும்போதெல்லாம் 'நீ நல்லா ஹைட்டா, ஸ்மார்ட்டா இருக்கியே... ஃபைட்டராகலாமே'ன்னு உசுப்பேத்தி ரணகளப்படுத்துவாங்க. துடிப்பான வயசாச்சே... பக்குன்னு பத்திக்கிச்சு. ஸ்டண்ட் யூனியன்ல நடந்த செலக்‌ஷன்ல ஒரு நாள் கலந்துக்கிட்டேன். எல்லா டெஸ்ட்லயும் செலக்ட்டாகி அடுத்த நாளே ஃபைட்டரா ஜாய்ன் பண்ணிட்டேன். பண்ணாத ரிஸ்க் ஷாட் இல்ல. ரஜினி, கமல்ல ஆரம்பிச்சு ஏறக்குறைய எல்லா நடிகர்களுக்கும் டூப் போட்டிருக்கேன். ஒரு கட்டத்துக்குப் பிறகு மாஸ்டராயிட்டேன். இப்போ எல்லோருக்கும் என்னை அறிமுகப்படுத்தின படம்னா பருத்தி வீரனைச் சொல்லலாம். அதுல நான் அமைச்ச சண்டைக் காட்சிகள் எனக்குப் பரவலான பாராட்டுக்களை வாங்கிக் கொடுத்திருக்கு'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறும் ராஜசேகர், சினிமாவில் ஃபைட்டரின் பணிகள் பற்றியும் சொன்னார்.

''ஃபைட்டருக்கு முக்கியம் ஆரோக்கியமான, திடமான உடம்பு. இதுதான் அடிப்படை. சினிமாவுல ஃபைட்டரா சேர, இந்தத் தகுதிகளோடு யூனியன்ல மெம்பராகணும். டைரக்டர், ஸ்டண்ட் மாஸ்டர்கிட்ட தன் படத்துக்கு எப்படிப் பட்ட சண்டை வேணும், பட்ஜெட் எவ்ளோன்னு சொல்லிடுவார். மாஸ்டர் யூனியன்ல






ருந்து ஃபைட்டர்கள பயன்படுத்திப்பார். ஃபைட்டர்ஸ்லயே மூணு கேட்டகரி இருக்கு. மாஸ்டருக்கு அசிஸ்டெண்ட், ஃபைட்டர், அப்புறம் ஹெல்பர். மாஸ்டருக்கு உதவிகரமா செயல்படுறவர் அசிஸ்டெண்ட். ஃபைட்டர், சண்டைக் காட்சிகளுக்கு நடிக்கறவர். ஹெல்பர், ஃபைட்டர்களுக்கு உதவியா செயல்படுவார். மூணு பேருக்குமே வெவ்வேறு விதமான சம்பளம். டூப் போட்டா அதுக்குத் தனிச் சம்பளம்.

உயிரைப் பணயம் வச்சித்தான் ஒவ்வொரு காட்சிலயும் நாங்க நடிக்கறோம். பல மாடி கட்டடத்துலேர்ந்து குதிக்கறது, கண்ணாடியை உடைக்கறது, பைக்ல - கார்ல சீறிப் பாயறது, ஹெலிகாப்டர்லருந்து குதிக்கறதுன்னு எல்லாமே ரியலா பண்றது தான். தேவையான பாதுகாப்பு ஏற்பாடுகளோடுதான் செய்வோம். சமயத்துல கால்குலேஷன் மிஸ்ஸாகறதும் உண்டு. நானே இதுவரை ரெண்டு மூணு முறை மரணத்தைத் தொட்டுப் பார்த்துட்டு வந்திருக்கேன். ஒரு முறை ஆந்திராவுக்கு ஷூட்டிங் போய் தலைல அடிபட்டு கோமா ஸ்டேஜுக்குப் போயிட்டேன். இன்னொரு முறை விலா எலும்பு முழுக்க உடைஞ்சு போச்சு. எல்லாருக்கும் ஏதாவது ஒரு விபத்து நடந்துட்டேதான் இருக்கு. ஆனா அதையெல்லாம் பார்த்தா வாழ முடியாது. ரிஸ்க்கான ஜாப்னு தெரிஞ்சுதானே நுழையறோம். எல்லாத்தையும் சகிச்சுக்கிட்டு இருக்க வேண்டியதுதான். எங்க யூனியன்ல வருஷத்துக்கு ஒருத்தராவது சினிமா விபத்தால இறந்துட்டே இருப்பாங்க. இப்பத்தான் ரெண்டு மூணு வருஷமா எதுவும் இல்ல.

**பொ**துவா ஃபைட்டர்ஸுக்கு யாரும் பொண்ணு தர்றதில்ல. வாழ்வா, சாவான்னு தெரியாதவனுக்குப் பொண்ணு கொடுத்துட்டுப் பயந்துட்டே இருக்க முடியுமா? அதான் நாங்க பெரும்பாலும் காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக்கிறோம். அப்பக்கூட எங்க வேதனையை வீட்ல அம்மாகிட்டயோ, மனைவிகிட்டயோ காட்டிக்க மாட்டோம். எனக்கு அடிபட்டு சீரியஸான எந்த விஷயமும் இதுவரை என் மனைவிக்குத் தெரியாது. இந்தப் பேட்டி மூலமா தெரிஞ்சாத்தான்



உண்டு. நான்னு இல்ல, எந்த ஃபைட்டரும் சந்தோஷத்தை மட்டும்தான் குடும்பத்தோடு பகிர்ந்துக்கணும்னு நினைப்பான். வேதனையைச் சொல்ல முடியாது. சொன்னா வேலைக்கு அனுப்பமாட்டாங்க.

ஃபீல்டுல எங்களுக்கு ரொம்ப மரியாதை உண்டு. பல நடிகர்கள், உயிரைக் கொடுத்து நாங்க பாடுபடுறதைப் பார்த்து நெகிழ்ந்துபோய் பாராட்டியிருக்காங்க. ஒரு முறை ஒரு தெலுங்குப் படத்துக்காக சிரஞ்சிவிக்கு டூப் போட்டேன். உடைஞ்ச பாலத்துல வில்லன் கார் ஓட்டிட்டு சிரஞ்சிவியோட தங்கச்சிய கடத்திட்டுப் போறான். மேலேயிருந்து ஹெலிகாப்டர்ல வந்து ஏணி வழியா இறங்கி சிரஞ்சிவி தங்கச்சிய காப்பாத்துற மாதிரி சீன். அந்தப் பாலம் டெட் எண்ட் பாலம். பாலம் முடிஞ்சதும் கீழே கடல். கார் நேரா போய் கடல்ல விழுற மாதிரி சீன். ஹெலிகாப்டர்லருந்து ஏணி வழியா தொங்கி டம்மி தங்கச்சி பொம்மைய தூக்கறதுக்குள்ள நான் பட்டபாடு இருக்கே... கொஞ்சம் அசந்தாலும் தலை சிதறி கடல்ல விழ வேண்டியதுதான். ரொம்ப கஷ்டமான ஷாட். கால்குலேஷன் படி கவனமா பண்ணினதால எந்தவிதமான விபத்தும் இல்லாம சிறப்பா செஞ்சேன். சிரஞ்சிவி சார் நெகிழ்ந்துபோய் பாராட்டினார். இன்னிக்கு சந்திச்சாலும் அந்தச் சம்பவத்தை நினைவு கூர்ந்து தோள்ல தட்டுவார்.

நாங்க சண்டை போட்டோம்னு யூனியனுக்குத் தெரிஞ்சா உடனே எங்க மெம்பர்ஷிப்பை கேன்சல் பண்ணிடுவாங்க!



* 'பருத்தி வீரன்' படப்பிடிப்பில்...

சமயங்கள்ல அடிபட்டு படுத்துக் கிடக்கும்போது பல ஹீரோக்கள் ஹெல்ப் பண்ணியிருக்காங்க; பண்றாங்க. யூனியன் எங்க பேர்ல மெடிக்ளைம் இன்ஷூரன்ஸ் பண்ணியிருக்கு. அதனால விபத்து ஏற்பட்டா ஓரளவுக்கு எங்களால தாக்குப் பிடிக்க முடியும்.

ஃபைட்டருங்கன்னா அடிதடில இறங்குறவங்க, மோசமானவங்கன்னு வெளில பேசிக்குவாங்க. ஆனா ஒண்ணு தெரியுமா, நாங்க சண்டை போட்டோம்னு யூனியனுக்குத் தெரிஞ்சா உடனே எங்க மெம்பர்ஷிப்பை கேன்சல் பண்ணிடுவாங்க. நாங்க நடுத்தெருவுக்கு வர வேண்டியதுதான். ஒழுக்கத்தை உயிரா மதிப்போம். உடற்பயிற்சியை வேதமா துதிப்போம்.

எங்களோட வேலை ரொம்ப டேன்ஜரானதுன்னு தெரிஞ்சும் பலர் இங்க வர ஆசைப்படுறாங்க. புதுசா வர்றவங்கதான் ஏதோ மோகத்துல வர்றாங்கன்னா, ஃபைட்டர்களோட வாரிசுகளும் இதே பணிக்கு வர்றதுதான் ஆச்சர்யமான விஷயம். அவங்களா விருப்பப்பட்டு, வேற வழி இல்லாம வந்தா ஒண்ணும் செய்ய முடியாது. ஆனா தெரிஞ்சே நாங்க எங்க பிள்ளைகளை இந்த வேலைல தள்ள மாட்டோம். இன்னைக்கு எங்க குடும்பம் 'காலைல வீட்டை விட்டுப் போனா உசுரோட திரும்புவோமா'ன்னு கண்ணீரோடு காத்திட்டிருக்கற மாதிரி நாளைக்கு நாங்களும் வேதனைல உழலத் தயாரா இல்ல!''

- சோகத்தோடு வெளிப்படுகிறது ராஜசேகரின் குரல். அதற்கு மேல் அவரால் பேச இயலவில்லை.

சந்திப்பு : **மு.மாறன்**

படம் : **பொள்ளாச்சி சுந்தரம்**

**குசும்பு ராஜ்**

# நாளாம் நாளாம் திருநாளாம்!

தே.மு.தி.க.வின் தலைவர் 'விஜயகாந்த்' பிறந்தநாளை, 'வறுமை ஒழிப்பு நாளாக' தொண்டர்கள் கொண்டாடி மகிழ்ந்தார்கள். இதுபோல வேறு சில பிரபலங்களுக்கும் கொண்டாட அவரது அபிமானிகளுக்கு இதோ ஐடியாக்கள்!

(பின் குறிப்பு: ஐடியாக்கள் காப்புரிமை பெற்றவை. அவற்றைப் பயன்படுத்த விரும்புகிறவர்கள் ஆசிரியரின் அனுமதி பெறவேண்டும்.)

**சஞ்சய் தத் பிறந்தநாள்**
**அப்பாவிகள் நாள்!**

நீதிபதி தீர்ப்பு கூறுகையில் குழந்தையைப் போல் பார்ப்பது, வார்டன் 'என்ன வேலை தெரியும்?' என்று கேட்டால், 'வேலைன்னா என்ன?' என்று கேட்பது, வெளியே வருகையில் சும்மா இல்லாமல் போலீஸ்காரருக்குக் கை கொடுத்து, அவரது வேலைக்கு வேட்டு வைத்துவிட்டு, எதுவுமே தெரியாமல், சனீஸ்வரன் கோயிலில் பூஜை செய்வது.



**சல்மான்கான் பிறந்த நாள்!**
**வேட்டையாளர்கள் நாள் மற்றும் கார் ரேஸர்கள் நாள்**

ஒரு தினத்தை இரண்டாகப் பிரித்துக் கொள்ளலாம். அதாவது காலை ஐந்து முதல் மாலை ஐந்து வரை வேட்டையாளர்கள் தினமாகவும், மாலை முதல் நள்ளிரவு வரை கார் ரேஸர்கள் நாளாகவும் கொண்டாடலாம். சிறந்த வேட்டையாளர்கள், சிறந்த ஓட்டுனர்கள் விருதுகளை ரசிகர்களுக்கு அளிக்கலாம்.



## ஜாலி ஸ்டோர்ஸ்



அப்பாக்களை கௌரவிக்கும் நாள். (தம் பிள்ளையின் வளர்ச்சிக்காக நெருங்கிய சொந்தங்களையும் தயவு, தாட்சணயமின்றி தூக்கி வீசும் அப்பாக்களுக்குக் கூடுதல் பரிசு)

(குறைந்த பட்சம் இரண்டு பலியாவது இருக்க வேண்டும்.)

**கவிஞர் வாலி பிறந்த நாள்**
**வார்த்தை வித்தகர் நாள்!**

சம்பந்தம் உண்டோ இல்லையோ எதுகை மோனையோடு பேசுபவர்கள், பதவியில் இருப்பவர்களை 'ஆஹா, ஓஹோ, வீரனே, சூரனே' என புகழ்பவர்களைப் பாராட்டும் நாள். (ஒரு பக்கம் இராமாயணம் பற்றி பேசும்போதே, இன்னொரு பக்கம் டபுள் மீனிங்கில், கவிதை பாடுவோருக்கு சகலகலா வித்தகர் என்ற சிறப்புப் பட்டமும் உண்டு)

**தொல்.திருமாவளவன் பிறந்தநாள்**
**பகுதி நேர ஊழியர்கள் நாள்!**

ஒரு வேலையில் இருந்துகொண்டே இன்னொரு வேலையைச் செய்யும் சாமர்த்தியசாலிகளைப் போற்றும் நாள். அரசாங்க சம்பளத்தை வாங்கிக்கொண்டு, எல்.ஐ.சி ஏஜண்ட், வட்டிக்கு விட்டு வசூல் செய்தல், பத்திரிகைகளுக்கு எழுதுதல், போன்றவற்றின் மூலம் சம்பாதிப்பவர்களுக்கு (சினிமாவில் நடிப்பதெனில் தனி பரிசு)

**கமலஹாசன் பிறந்தநாள்**
**மாறுவேடம் நாள் மற்றும் முத்தத் திருநாள்**

மஃப்டியிலும் மாறு வேடத்திலும் உளவறிந்து, குற்றவாளிகளைப் பிடிக்கின்ற போலீஸ்காரர்களைப் பாராட்டும் நாள். பரிசாக மேடையில் வைத்து 'இச்' 'இச்' கொடுக்கலாம்!

**கலைஞர் கருணாநிதி பிறந்தநாள்**
**வாரிசுகள் நாள்!**

தாம் மட்டும் பெயரும் புகழும், சம்பாதிக்காமல், தமது பிள்ளை போன்றவர்களையும் வளர்த்து ஆளாக்கி, உலகம் அறிய வைக்கும் பொறுப்பான



**ரஜினிகாந்த் பிறந்த நாள்**
**பற்றுள்ள துறவிகள் நாள்!**

'இதுதான் கடைசி சம்பாத்தியம்' 'இதோ இமயத்துக்குப் போறேன்', 'என்று உதார் விட்டுக்கொண்டே கோடிக்கணக்கில் சம்பாதிக்கும் 'ஆசையற்ற' மனிதர்களைப் போற்றும் நாள்.

● மு.பெரியசாமி,
விட்டுக்கட்டி

? அணு சக்தி ஒப்பந்தம் நிறுத்தி வைக்கப்படவில்லை என்று மத்திய அரசு விளக்கம் அளித்துள்ளது பற்றி...?

! ஒப்பந்தம் நிறுத்திவைக்கப்படவில்லை; அதன் அமலாக்கம் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. கம்யூனிஸ்டுகள் திருப்தி அடையும்வரை இந்த இரண்டுங்கெட்டான் நிலை நீடிக்கும்.

* ட்ரீம் லேண்ட் டைரி

* கலக்கத்தின் வெளிப்பாடு!

# 2011ல் முதல்வராமே சரத்குமார்?

! ட்ரீம்லேண்டிலிருந்து அரசியலுக்கு வந்தவர் இப்படிப் பேசுவதில் வியப்பில்லை.

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

? தமது ஆட்சியைக் காப்பது, தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்களின் பொறுப்பு என்று கடலூரில் முதல்வர் பேசியது பற்றி..?

! இந்த ஆட்சியைக் காப்பது கூட்டணி கட்சிகளின் பொறுப்பு என்பதே உண்மை. இந்தப் பொறுப்பு அரசு மீது வெறுப்பாக மாறிவருவதால், முதல்வர் கலக்கமடைந்து, ஜாதி அரசியலில் தீவிரமாக இறங்குகிறார்.

● எம்.பாஸ்கர், திண்டுக்கல்

? துணைவேந்தர் பதவி ஒரு கோடி முதல் ஐந்து கோடி வரை விலைபோகிறதாமே?

! சொன்னவர் முன்னாள் துணைவேந்தர் என்பதால் மட்டுமின்றி, இன்று நடப்பது பணநாயகமே என்பதாலும் நம்பமுடிகிறது.

● சோ முருகானந்தம், திருவைகாவூர்

? 2011-ல் முதல்வர் ஆவேன் என்று சரத்குமார் கூறியிருப்பதைப் பற்றி...?

## நீங்கள் கேட்டவை

## தராசு

● பி.பத்மாவதி, கோவை ★

? 'அதிக சம்பளத்துக்கு எந்தப் படிப்பு பயன்படும்?' என்ற நிலைக்கு மாணவர்கள் வந்ததற்கு எது காரணம்?

! ஐ.டி.துறையின் திடீர் வளர்ச்சியும் அதன் வானளாவிய சம்பள விகிதங்களை, ஒரு முன்மாதிரியாகக் கொண்டு பேராசைப் படுவதும்தான்.

● எஸ்.சங்கர், திருப்பரங்குன்றம்

? இந்திய பொருளாதார ஒட்டுமொத்த வளர்ச்சி 9.3 சதவிகிதமாக உயர்ந்திருப்பது தமக்குத் திருப்தி அளிப்பதாக நிதி அமைச்சர் தெரிவித்துள்ளாரே...?

! அடுத்து வரும் தேனி முருகேசனின் கேள்வியே ப.சிதம்பரத்துக்கு எச்சரிக்கை!

● தேனி முருகேசன், தேனி

? 'நமது நாட்டில் இன்னமும் ஒரு வேளை மட்டும் உண்பவர்கள் சுமார் 25 கோடி பேர் வாழ்கின்றனர்' என்று மனித உரிமை கழகத்தின் முன்னாள் தலைவர் டி.ஆர்.கார்த்திகேயன் கூறியுள்ளாரே?

! ப.சி.திருப்தி அடைந்தால் அவர் பசி அறியாதவர் என்றுதான் அர்த்தம்!

● க.நா.இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம் ❒

? நடிகர் - நடிகையருக்குத் தயாரிப்பாளர்கள் விதித்துள்ள கட்டுப்பாடுகள் நடைமுறையில் சாத்தியம்தானா?

! சம்பளத்துக்கு சீலிங் இல்லாதவரை இதர கட்டுப்பாடுகள் பற்றி டாப் நடிகர்-நடிகையர் கவலைப்பட மாட்டார்கள். மேலும், கட்டுப்பாடுகள் ஜூனியர் நடிகர்களைத்தான் பாதிக்கும். சூப்பர்களும் புரட்சிகளும் தாங்களாகவே மனமுவந்து கட்டுப்பட்டால்தான் உண்டு.

● இரா.சக்கரபாணி, மதுரை

? மதுரை மேற்குத் தொகுதியின் வெற்றிக்கு உழைத்த கட்சி நிர்வாகிகளுக்கு, தங்கச் சங்கிலி, மோதிரம் பரிசு வழங்கி மு.க.அழகிரி பாராட்டியுள்ளாரே?

! அருவருப்பளிக்கும் பணநாயகப் பண்பாடு. அதிகார பலத்தாலும், பணத்தாலும் ஜனநாயகத்தைப் படிப்படியாகப் பலவீனப்படுத்தி வருகிறார்கள் நம்

✱ பசி அறியா பேச்சு!

✱ பணநாயகப் பண்பாடு!

✱ நிதியினால் வந்த வினை!

● கே.சண்முகம், ஆதமங்கலம்புதூர்

? தி.மு.க.வும் - பா.ம.க.வும் ஒரே நாளில் ராசியானது எப்படி?

! யார் சொன்னது ராசியாகிவிட்டதாக? இது நீறுபூத்த நெருப்பு.



✱ சுவாரஸ்ய...



✱ ... கூட்டணி!

அரசியல்வாதிகள்.

● ச.ஆ.கேசவன், இனாம்மணியாச்சி

*? கசாப்புக்கடை, அசைவ உணவகம், மதுபான அங்காடி போன்றவற்றில் காந்தியடிகள் படத்தை வைக்கிறார்களே?*

! நிச்சயமாக நீக்கப்பட வேண்டும். இது போன்ற கடைகளில் பணிபுரிவோருக்கு மகாத்மா மீது பற்று இருந்தால் இந்த வேலைக்கே வரமாட்டார்கள். கொள்கைக்கு உடன்படாத இடங்களில் அவரது படங்களை மாட்டி அவமதிக்க வேண்டாம். அரசு நடவடிக்கை எடுப்பது அவசியம்.

● அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி - 21

*? "வெடிகுண்டு வைத்து ராமர் பாலத்தை இடித்தால் எரிமலை வெடிக்கும் வாய்ப்பு உள்ளது" என்று ராமர் பாலம் பாதுகாப்பு இயக்க அகில இந்திய பொதுச் செயலாளர் வேதாந்தம் கூறுகிறாரே?*

! ராமர் பாலத்துக்குச் சேதமின்றிப் பணியைத் தொடருங்கள் என்று உச்சநீதிமன்றம் உத்தரவிட்டு, போராட்டத்துக்கே அவசியமில்லாமல் செய்துவிட்டது. அரசு, ராமர் பாலத்தை மதிக்காவிட்டாலும் உச்சநீதிமன்றத்தை மதித்துச் செயல்படட்டும்.

❑ ரூ.100/- பரிசு பெறுபவர் :

க.நா.இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்

★ ரூ.50/- பரிசு பெறுபவர் :

பி.பத்மாவதி, கோவை

● ஜே.துரைராஜ், ஆலப்பாக்கம்

*? முன்னாள் சமூக நலத்துறை மந்திரி வளர்மதிக்குச் சொந்தமான பன்னிரண்டு இடங்களில் 'ரெய்ட்' நடந்திருக்கிறதே?*

! யப்பாடி! அவ்வளவு வீடுகளும் (இடங்கள்) அவருக்குச் சொந்தமானவையா? மதியினால் வளராமல், நிதியினால் வளர முற்பட்டால் கடைசியில் இந்தக் கதிதான்!

● எஸ்.சாந்தி, காட்பாடி

*? இன்னொரு ஜாம்பவான் மணிரத்தினத்துடன் சூப்பர் ஸ்டார் மீண்டும் இணையப் போவது பற்றி...?*

! சுவாரஸ்யமான காம்பினேஷன். வெற்றிபெற வாழ்த்துவோம்!

● எல்.எம்.மங்கை, திருவண்ணாமலை

*? ஆளும் கட்சியினரை, 'மைனாரிட்டி தி.மு.க. அரசு, மைனாரிட்டி தி.மு.க.அரசு' என்று அ.தி.மு.க. வெறுப்பேற்றுகிறதே - நியாயமாண்ணே?*

! உண்மையைச் சொன்னால் அதிலென்ன அநியாயம் இருக்கிறது? இந்த அவப்பெயரைத் தவிர்ப்பதற்காகவாவது காங்கிரஸை ஆட்சியில் சேர்த்துக் கொண்டிருக்கலாம்.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

*? பழனி 'ரோப் கார்' விபத்து பற்றி...?*

! திருப்பதிக்கு அடுத்தபடியாக அதிக பக்தர்கள் வரும் இடம் பழனி. ஆனால், அங்கே அவர்களுக்கான வசதியோ சுற்றுச் சூழல் பராமரிப்போ மிகமோசமாக உள்ளது. இந்த ரோப் கார் விபத்து, பராமரிப்புக் குறைபாட்டின் ஒரு துளிதான்!

● கு.அருணாசலம், தென்காசி

*? சேலம் ஜங்ஷனில் அமைச்சர் வீரபாண்டியார் தலைமையில் நடைபெற்ற ரயில் மறியலில், துணை சபாநாயகர் வி.வி.துரைசாமி கலந்துகொண்டது சரியா...?*

! அமைச்சர் போராட்டம் நடத்தியதே சரியில்லை. அது முதல் கோணல், துணை சபாநாயகர் கலந்து கொண்டது துணைக் கோணல்! ●

# ஈனர்கள் சபையில் திரௌபதி கதற...

## ஆசிரியர் பக்கம்

கடந்த வாரத்தில் ஒரு தினசரியில், மண்ணெண்ணெய் வண்டி ஒன்றை நடுத்தர வயதுப் பெண்ணொருவர் இழுத்துச் செல்லும் புகைப்படம் இடம் பெற்றிருந்தது - 'போகிற போக்கைப் பார்த்தால், ஆண்களுக்குத் தான் 33 சதவிகிதம் இட ஒதுக்கீடு கேட்க வேண்டும் போலிருக்கிறது!' என்கிற ஃபோட்டோ வாசகத்துடன்!



படத்தில் இருந்த பெண் மணி எந்த நிர்ப்பந்தத்தால் இப்படி வண்டி இழுக்கும்படி ஆயிற்று என்பது நமக்குத் தெரியாது. நடுத்தர வயதினரான அவருக்கு, அப்பணி அதே வயது ஆணைக்காட்டிலும் மிகக் கடுமையானது என்பது மட்டும் அனைவருக்கும் தெரியும்.

பெண்களுக்கு உணர்வு ரீதியான சமத்துவத்தை அளிக்க அச்சமும் தயக்கமும் காட்டும் நமது சமுதாயம், உடல் ரீதியான சமத்துவத்தை அவர்கள் மீது சுமத்தி வஞ்சகத் திருப்தி கொள்வதைப் பார்க்கிறோம். - இதன் விளைவுதான்:

பேருந்துகளில் பெண்களுக்கான இருக்கைகளை விட்டுக் கொடுக்க ஆண்கள் காட்டும் எரிச்சல்!

சாலைகளில் பெண்கள் வாகனங்கள் ஓட்டிச் சென்றால் அவர்களை முந்தியே தீருவது என்று ஆண் ஓட்டுனர்கள் கொள்ளும் ஆங்காரம்!

பெண்களின் வாகனங்கள் பழுதாகி நின்றால் ஆண்கள் காட்டும் ஏளனம்!

காவல்துறைப் பணிக்கான நுழைவுத் தேர்வுக்கு வந்த நிறைமாத கர்ப்பிணிப் பெண்ணை ஓட்டப் பரிசோதனையில் இரைக்க இரைக்க ஓடச் செய்யும் கொடுமை!

''ஐயா! பெண்கள் விரும்புவது இந்த மாதிரி அசுரத்தனமான சமபாவத்தை அல்ல'' என்று வருந்தி பெருமூச்சுவிட்டு விளக்கம் தர முற்பட்டால், இன்னொரு நாளிதழில் இன்னொரு அதிர்ச்சி:

அயல்நாட்டு உள்ளாடைத் தயாரிப்பு நிறுவனமொன்று ரூ.400 முதல் ரூ.1200 வரையிலான விலைகளில், பெண்கள் உள்ளாடைகளை, சென்னையில் அறிமுகம் செய்ய இருப்பதாக முதல் பக்கச் செய்தி! 'வெற்றிக் களிப்பு' என்ற பொருள் பட ஆங்கிலப் பெயர்க் கொண்ட அந்தத் தயாரிப்புகளை (மட்டுமே) அணிந்த ஒரு பெண்ணின் படமும் அச் செய்தியுடன்! கவனியுங்கள், இது விளம்பரமல்ல; 75 ஆண்டு பாரம்பரியமுள்ள செய்தித்தாளின் முதல்பக்கச் செய்தி!

மாற்றுப்புடைவைக்குக்கூட வழியில்லாத கோடிக்கணக்கான ஏழைப் பெண்கள், பருத்திச் சேலைகளின் விலை கட்டுப்படியாகாததால் சுட்டெரிக்கும் வெயிலிலும் எரிகிற பாலியஸ்டர் சேலைகளை உடுத்திக் கொண்டு வேலை செய்யும் இலட்சக் கணக்கான விவசாயக் கூலிப் பெண்கள்... ஒரு குடம் தண்ணீருக்காக உயிரைப் பிடித்துக் கொண்டு மைல் கணக்கில் நடந்து திரும்பும் கிராமத்துப் பெண்கள்... - அத்தனை பேருக்கும் இழைக்கப்பட்ட அவமானமாகத்தான் தோன்றுகிறது - இந்த 'வெற்றிக்களிப்பு'ச் செய்தி!

ஈனர்கள் சபையில் திரௌபதி கதற, அவள் மானத்தைக் காக்க வந்தவன்தான் நம் பெண்களையும் காக்க வேண்டும்!

As per BIS,
IS:2888-1983.



## உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு
## தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் ஸின்த்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. ஸின்த்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே ஸின்த்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




மேனிப் பராமரிப்பு என்றென்றும்

